RôÚp Eí m

# தேவ்பந்த்

JÚ Yy a ô©V TôNû \

ஆசிரியர் :

மௌலானா மௌலவி அல்ஹாஜ்
M.A l Ô o Ŵ ^ ôd காதிரி ஸூபி
(இமாம், ஷாமியான் தைக்கால், ஆப்ரஹாம் பண்டிதர் ரோடு, தஞ்சை)

வெளியீடு :
Roa ô ùY° ÅhPLm
தஞ்சை.



நூல் பெயர் : "தேவ்பந்த்" ஓர் வஹ்ஹாபிய பாசறை

தொகுப்பாளர் : மௌலவி
M.அப்துர் ரஸ்ஸாக் காதிரி ஸூபி
(இமாம், ஷாமியான் தைக்கால், ஆப்ரஹாம் பண்டிதர் ரோடு, தஞ்சை)

நூல் நோக்கம் : "பசும் தோல் போர்த்திய பு" போன்று உள் ஒன்று வைத்து புறம் ஒன்று பேசித் திரிந்து தமிழக முஸ்லீம்களை ஏமாற்றும் தேவ்பந்தின் முகமூடியை வெளிச்சம் போட்டுக் காட்டுவதே.

முதல் பதிப்பு : ஜமாத்தில் ஆஹிர் 28, ஹிஜ்ரி 1433 (மே 20, 2012)

வெளியீடு & பதிப்புரிமை : தர்ஹா வெளியீட்டகம், தஞ்சை.

நன்கொடை : ரூ.30/-

புத்தகம் கிடைக்குமிடம்: ✆:04362-270786
74/176-A, முதல் மாடி,
இரட்டை மஸ்தான் தர்ஹா எதிரில்,
காந்திஜி ரோடு, தஞ்சாவூர் - 613 001.

# பொருளடக்கம்

## வாழ்த்துரை

### அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ் ....

உருது மொழியில் தேவ்பந்த் என்றாலே பேய்களையும் பிசாசுகளையும் அடைத்து வைத்தல் என்றுதான் பொருள்.

வஹ்ஹாபிய ஷைத்தான்களுடைய கொள்கையை பரப்ப தேவ்பந்த் மத்ரஸாவும் தப்(பு)லீக் ஜமாஅத்தும் எப்படியெல்லாம் துணை நிற்கிறது என்பதை இந்நூல் படிப்போர் புரிந்துகொள்வார்கள்.

நம் உயிரைக் காப்பதற்காக புயலைக் கண்டு ஓடுகிறோம், புலியைக் கண்டு ஓடுகிறோம், அவ்வாறே கொட்டவரும் பாம்பு, முட்டவரும் மாடு, வெட்டவரும் வில்லன் இவற்றைக் கண்டும் ஓடுகிறோம், பொருளைக் காக்க பொல்லாத திருடனைக் கண்டு ஓடுகிறோம்.

இதெல்லாம் சரிதான். இதைவிட இன்றியமையாதது எதுவெனில் - விலை மதிக்கவொண்ணா நம் ஈமானைக் காக்க குள்ள நரிக்கூட்டத்தைக் கண்டு காத தூரம் நாம் ஓடுவோமல்லவா? அக் கூட்டங்களில் ஒன்றுதான் இஸ்யாஸ் தப்(பு)லீக் ஜமாஅத் அக்கூட்டத்தின் குள்ளநரித் தந்திரத்தை தோலுரித்துக் காட்டும் தூயவர் மௌலானா மௌலவி ஹாஜி.அப்துற் றஸ்ஸாக் சூஃபி அவர்களின் துணிச்சலான இந்த சேவை சுன்னத் வல்ஜமாஅத்திற்கு இப்போது தேவை.

அல்லாஹ் இதை கபூல் செய்வானாக.

அன்புடன்
மௌலவி முஹம்மத் காஸிம் மஹ்ளரி
கலீஃபா ஹல்லாஜியா தரீக்கா,
தலைமை இமாம் ஏழுலெப்பை
ஜாமிஆ மஸ்ஜித் நாகூர்ஷரீஃப்



## ஏன்?.... எதற்கு?.....

அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமகிய அல்லாஹ்வின் திருநாமத்தால் ஆரம்பம் துவக்கம் செய்கிறேன்.

அகிலத்தின் அருட்கொடையான அண்ணல் எம்பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் மீதும், அவர்களது புனித குடும்பத்தினரான சாதாத்மார்களின் மீதும், சத்திய சஹாபா பெருமக்கள் மீதும், வலிமார்கள், நாதாக்கள் மீதும் அல்லாஹ் என்றும் ஸலாத்தையும், ஸலாமையும் பொழிவானாக. ஆமீன்.

உலகில் தோற்றுவிக்கப்படும் எல்லா இயக்கங்களும், அமைப்புகளும் தங்களின் பிரதான நோக்கங்களையும், கொள்கைகளையும் , அதை செயல்படுத்தும் நடைமுறைகளையும்; ஒளிவு, மறைவின்றி மக்களிடத்தில் ஆதரவு கேட்டு தங்களை வளர்த்துக் கொள்கின்றன. இந்நிலை நாடு, தேசம், மதம், இனம் என்ற பாகுபாடின்றி அனைத்துக்கும் பொருந்தும்.

சமீபகாலங்களாக இஸ்லாமிய மார்க்கத்தில் புகுந்து மார்க்கத்தையே சல்லடையாக்க முயற்சிக்கும் வஹாபிய தீவிரவாத இயக்கம் தமிழகத்திலும் தன்னை நிலைநிறுத்த முயற்சித்து அஹ்லுல்குர்ஆன், அஹ்லுல்ஹதீஸ், வஹாபிகள் தொடங்கி தவ்ஹீது வஹாபிகள் வரை தங்கள் கொள்கைகளையும் நோக்கங்களையும், "நாங்கள், குர்ஆனை மட்டும் பின்பற்றுவோம், ஹதீதுகள் வேண்டாம், நாங்கள் ஹதீதுகளை மட்டுமே பின்பற்றுவோம், குர்ஆன் வேண்டாம். ரஸூலுல்லாஹ் சாதாரண மனிதர்தான், தனிப்பெரும் சிறப்பு ஒன்றுமில்லை, சஹாபாக்கள் தவறு இழைத்திருக்கிறார்கள், இஸ்லாத்தின் நாற்பெரும் இமாம்கள் எதற்கு? எங்களுக்கு எல்லாம் தெரியும். யார் இந்த இறைநேசச் செல்வர்கள் இடைத் தரகர்களா? என்று கொஞ்சம் இஸ்லாமும், ஈமானும் இன்றி தரக்குறைவாவும் தாறுமாறாகவும் விமர்சனம் செய்து தங்களுடைய முழுமையான அடையாளம் காட்டி சுன்னத்வல் ஜமாஅத் பொது மக்களை தம்பக்கம் இழுக்க முயற்சிக்கின்றார்கள்.

ஆனால் உத்திர பிரதேச மாநிலத்தில் தேவ்பந்து என்ற ஊரில் தாருல்உலூம் காஸிமிய்யா என்று தோற்றுவிக்கப்பட்ட வஹாபிய அமைப்பும் மதரஸாவும், அதன் கொள்கைகளையும் நோக்கங்களையும் செயல்படுத்த துடிக்கும் தப்லீக் ஜமாஅத் இயக்கமும், முழுக்க முழுக்க வஹாபிய கொள்கை கோட்பாடுகயையும், சித்தாந்த நடைமுறைகளையும், இன்னும் சொல்லப் போனால் தவ்ஹீது வஹாபிகளை விட கேவலமாக அல்லாஹ், ரஸூலுல்லாஹ், வலிமார்கள் என எல்லோரையும் கேவலமாக தங்கள் நூல்களிலும் எழுதி அதையே திரும்ப திரும்ப பக்கங்களில் மாற்றி அச்சுப்போட்டு வெளியிட்டுக் கொண்டு பள்ளிவாசல்கள் தோரும். தாலீம்கிதாப் வாசிக்கிறேன் பேர்வழி என்று தப்லீகிநிசாப் (1980 வரை வாசிக்கபட்டது) பின் அதுவே சரியில்லை என்று கூறியபோது சற்று பக்கங்களை கூட்டி ஃபஜாயிலுல் ஆமால் (2000 வரை வாசிக்கப்பட்டது) அதுவும் சரியில்லை என்று கூறி இப்போது முன்தகபாத்து ஹதீஸ் என்று கூறி எதையே வாசிக்கிறார்கள்.

நாங்கள் கலிமாவை எத்திவைக்கிறோம், தொழுகைக்கு அழைக்கிறோம் என்று வெளிப்படையாக கூறி, ஏமாற்றி தவ்ஹீதுவாதிகள் கூறும் அதே வஹாபியக் கொள்கையை மக்கள் மீது திணிக்கிறார்கள். அதிலும் தாங்கள் சுன்னத் ஜமாஅத் தான் என்பதுதான் இதில் மாபெரும் முனாபிக்தனமான அவர்கள் கூற்றாகும்.

எனவேதான் எல்லா அமைப்புகளும், இயக்கங்களும், தங்கள் கொள்கைகளையும், நோக்கங்களையும் வெளிப்படையாக கூறும்போது தேவ்பந்திகளும், அதன் இயக்கமான தப்லீக் ஜமாஅத் மட்டும்தான் தங்களுடைய வஹாபியக் கொள்கையை மக்கள் முன் கூறாமல் கலிமா, தொழுகை என்ற போலிப் போர்வையில் நுழைந்து கொள்வதை இந்நூலின் தொகுப்பாளர் பலமாக நிறுவியுள்ளார்.



தமிழகத்தின் பழம்பெரும் தாய் மதரஸாவான பாக்கியாத்தின் அத்தனை குழப்பங்களுக்கும் தேவ்பந்து மதரஸா நல்லது, தப்லீக் ஜமாஅத் கெட்டது என்று லிபாஸ் ஆலிம்களின் சபை முடிவுக்கு வராமல், ஆடு பகை குட்டி உறவு என்ற தமிழ் பழமொழிதான் நினைவுக்கு வருகிறது. தேவ்பந்தும், தப்லீக் ஜமாஅத்தும் ஒரு அழுகியமரத்தின் வஹாபிய குட்டையில் ஊரிய மட்டைகள் என்பதை புரிந்து கொள்ள ஆசிரியரின் முயற்சி சிறப்பானது. தமிழக தர்ஹாக்கள் ஒருங்கிணைப்பு பேரவையின் முதல் மாநில மாநாட்டில் இந்நூலை வெளியிடுவது சாலச்சிறந்தது என்று பாராட்டி, தர்கா மாத இதழ் மகிழ்ச்சியடைகிறது.

அல்லாஹ்வும் அவனது ரஸூலும், அவ்லியாக்களின் துஆ பரக்கத்தால் நம்மை நேரான பாதையில் நடத்திட போதுமானவன்.

வஸ்ஸலாம்

**தர்ஹா வெளியீட்டகம்**
74/176- A, Ist Floor, Ghandiji Road,
opp - Erattai Mastan Dargah,
Thanjavur - 613 001.
Phone : 04362 270786
Mobile : 98415 78692
Email : editor@sahebdargah.org
Website : www.sahebdargah.org

தாருல் உலூம்

# தேவ்பந்த்

## ஒரு வஹ்ஹாபிய பாசறை

### வஹ்ஹாபிகள் என்று அழைக்கப்படுபவர் யார்?

**ஹஜ்ரத் அப்துல்லாஹ் இப்னு உமர் ரலியல்லாஹ் அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள்.**

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிரார்த்தார்கள். "இறைவனே! எங்களது ஷாம் தேசத்துக்கும் பரக்கத் செய்வாயாக. எங்களது யமன் தேசத்துக்கும் பரக்கத் செய்வாயாக அச்சமயம் அங்கிருந்த நஜ்து தேசத்தவர் ( இதை ரியாத் என பெயர் மாற்றினர் ) சிலர் நஜ்து தேசத்துக்காகவும் ( ரியாத் ) 'துஆ' செய்யும்படி கேட்டுக் கொண்டனர். மறுமுறையும் நாயகம் ஸல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஷாம்-யமன் தேசங்களுக்கு மட்டும் 'துஆ' செய்தார்கள். மீண்டும் நஜ்து ( ரியாத் ) தேசத்தவர் தங்களது தேசத்துக்காக 'துஆ' செய்யும்படி கோரவே நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், நஜ்தில் ( ரியாத் ) அதிர்ச்சிகளும் பித்னாக்களும் உண்டாகும். அங்கு ஷைத்தானுடைய கூட்டம் வெளியாகும்." என்று கூறினார்கள் – ஸஹீஹுல் புகாரீ.

### இப்னு தைமியா:

நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது திருவாக்கின்படி நஜ்து (ரியாத்) தேசத்தில் இப்னுதைமியா என்பவர் உண்டானார். இவர் கல்வி கேள்விகளில் தேர்ச்சி பெற்றிருந்தும் அகக்கண் குருடானவர்; இறைவனால் இருதயத்திலும், செவியிலும் முத்திரை இடப்பட்டவர். இவர் எழுதிய புத்தகங்களில் **சிராத்தல்-முஸ்தகீம்** என்பதும் ஒன்று. இதில் அவர் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம், அஹ்லெ பைத்து, ஸஹாபாக்கள்; இமாமெமுஜிதஹிதுக்கள், அவ்லியாக்கள் ஆகியோரை இழிசொற்களால் நிந்தித்து சொல்லத்தகாத சொற்களால் தூஷணம் செய்துமிருக்கிறார், மேலும் இமாம்களின் ஏகோபித்த அபிப்பிராயங்களுக்கு முற்றிலும் முரணாக (மஸாயில்கள்) விதிமுறைகள் உண்டுபண்ணியிருக்கிறார். அக்காலத்தில் பிரபல்ய உலமாக்கள் இப்னுதைமியாவின் கருத்துக்கள் கொள்கைகளுக்கு மறுப்பு எழுதி இருக்கிறார்கள். இவருடைய பிரச்சாரத்தால் மக்களிடையே குழப்பம் ஏற்பட்டு இறுதியாக சிரியா அரசாங்கம் டமாஸ்கஸ் நகர சிறையில் இவரை சாகும் வரை காவலில் வைத்தது. இவர் ஹிஜ்ரி 728 இறந்தார்.



### இப்னு தைமியாவை பின்பற்றிய அப்துல் வஹ்ஹாபு நஜ்தீ:

ஹிஜ்ரி 1203 துருக்கி சுல்தான் 2-வது அப்துல் மஜிதுகானின் மறைவுக்குப்பின்பு நாட்டில் கொந்தளிப்பு ஏற்பட்டது, இந்த சந்தர்ப்பத்தை இப்னுதைமியாவின் கொள்கைகளை தீவிரமாக பின்பற்றி பிரச்சாரம் செய்துவந்த அப்துல் வஹ்ஹாப் நஜ்தீ என்பவர் பயன்படுத்திக்கொண்டு சூழ்ச்சி செய்து தாமே தலைவராக பிரகடனப்படுத்திக்கொண்டார். இவர் தமது உறவினர்களை அரசாங்க அதிகாரிகளாக்கினார். துருக்கி சுல்தானுடைய பெயருக்கு பதிலாக அப்துல் வஹ்ஹாபு நஜ்தீயுடைய பெயர் குத்பா வில் சேர்க்கப்பட்டது. இவர் இப்னுதைமியாவை பின்பற்றி புதிதாக ஒரு மதுஹபு உண்டாக்க முற்பட்டு சுன்னத் வல்-ஜமா அத்திற்கு முற்றிலும் முரண்பட்ட கொள்கைகளை உருவாக்கினார். இவருடைய இளைய மகன் முஹம்மது என்பவர் அதற்கு மெருகேற்றி விரிவுரை செய்து அதற்கு **கிதாபுத் தௌஹீது** என்று பெயரிட்டார்.

**முஹம்மது இப்னு அப்துல் வஹ்ஹாபு நஜ்தீ:**

அப்துல் வஹ்ஹாபுடையமகன் முஹம்மது (முஹம்மது இப்னு அப்துல் வஹ்ஹாபு) தகப்பனுக்குப்பின் தலைவராகி ஓதும்போதெல்லாம் "நபியைக்கொண்டு சிபாரிசு தேடுகிறவன் காபிராவன்" என்று ஓதுவதை வழக்கமாக்கிக்கொண்டார். இவருடைய படைத்தலைவன் **சவுது** (ஹிஜாஸ் பகுதிகளை உள்ளடக்கிய அரேபிய தீபகற்பம் இன்று இவன் பெயரலேயே சவுதி அரேபியா என்று சொல்லப்படுகிறது.) என்பவர் ஹிஜ்ரி 1221 ஹஜ்ஜுக்கு போவதாக பாசாங்கு செய்து பெரும்படையுடன் மக்காவுக்குள் நுழைந்து பொருள்களை சூறையாடி ஆண், பெண், குழந்தை, வயோதிகர் என்ற பாகுபாடு இன்றி எல்லாரையும் வெட்டி வீழ்த்தினான். ஹரம் ஷரீபுக்குள் நுழைந்தவர்களும் உயிர்பிழைக்கவில்லை. பல பள்ளி வாயில்களும் – கப்ருகளும் தகர்க்கப்பட்டன, மதீனாவில் ஹஜ்ரத் செய்யிதினா அப்பாஸ் செய்யிதினா இப்னு அப்பாஸ் செய்யிதினா உதுமான், செய்யிதினா பாத்திமா ஜஹ்ரா ரலியல்லாஹ் அன்ஹும் ஆகியோர்களின் மக்பறாக்கள் இடித்து வீழ்த்தப்பட்டன. ஸலவாத் ஓதியவர்கள் கொல்லப்பட்டனர்–ஹதீஸ் பிக்ஹ் நூற்கள் முதலியவை எரிக்கப்பட்டன. ஜித்தா, தாயிப், மக்கா, மதீனா கர்பலா நகரங்கள் இக்கெடுதிக்குள்ளாகின: ரவுலத்துன் நபியையும் தரைமட்டமாக்க முற்பட்டபோது அந்த ஷைத்தான்கள் அற்புதமாக செத்துமடிந்தனர். அதாவது நபியின் மண்ணறையை இடிக்கப் முயன்றவன் பாம்பு கொட்டி இறந்தான். இன்றைய தவ்ஹீது வாதிகளின் அடாவடிகளின் மூலர்கள் இவர்கள்.

## 3. இந்தியாவில் வஹ்ஹாபியக் கொள்கை

பதிமூன்றாவது நூற்றாண்டில் டில்லி மாநகரில் கல்வியில் பேரும், புகழும் வாய்ந்த அஸீஸிய்யாக் குடும்பத்தில் (ஷெய்குனா மௌலானா ஷாஹ் அப்துல் அஸீஸ் முஹத்திது திஹ்லவி ரஹிமஹுல்லாஹ் அவர்களின் குடும்பத்தில்) முஹம்மது இஸ்மாயீல் என்றொருவர் தோன்றினார். அவர் இயற்கையிலேயே புத்திக் கூர்மையானவர்



வெளிரங்கமான (இல்மு) கல்விகளைக் கற்றுமுடித்தபின் அவருக்கு பிரதேசம் சுற்றுப்பிரயாணம் செய்ய வேண்டும் என்ற ஆவல் ஏற்பட்டது. ஹஜ்ஜுக்குப் போக நாடி ஹிஜாஸ் போனார்.

சில சமயம் புத்திக்கூர்மை ஈமானையும், மார்க்கத்தையும் நாசப்படுத்தவும் செய்கிறது. மௌலவி இஸ்மாயீலுக்கு வஹ்ஹாபிய்யாக்களுடைய பிரபல்யமான "கிதாபுத் தவ்ஹீத்" என்ற நூல் கிடைத்தது. அவருடைய சுபாவம் புதியதை விரும்பக் கூடியதாக இருந்தது. அவர்தானே அந்தக் கிதாபை மொழிபெயர்த்து அதற்கு "**தக்வியத்துல் ஈமான்**" என்று பெயர் வைத்தார். இந்த கிதாபு இப்பொழுதும் ஒவ்வொரு வஹ்ஹாபியரின் வீட்டிலும் இருக்கிறது. அவர்களுடைய நூல் நிலையத்திலும் இருக்கிறது. மௌலவி இஸ்மாயில், அப்துல் வஹ்ஹாபு நஜ்தியைப் பின்பற்றி மக்கா முஷ்ரிக்கீன்கள் விஷயத்தில் இறங்கிய ஆயத்துகளை எல்லாம் முஸ்லிம்கள் பேரில் சுமத்தி ஷிர்க்கைப் போட்டு எல்லா முஸ்லிம்களையும் முஷ்ரிக்குகள் என்று முடிவு செய்தார்.

நபிமார்கள், அவ்லியாக்கள் சன்மார்க்கப் பெரியோர்களை எல்லாம் பற்றிக் கடுமையாகத் தூஷணித்திருக்கிறார். அவற்றை எழுதுவதானால் தனியாக ஓர் பெரிய நூல் தேவைப்படும். அன்பியாக்கள், அவ்லியாக்களை ஓரிடத்தில் "கேவலம் செம்மானைவிட மிகவும் தாழ்ந்தவர்கள்" என்றும் மற்றுமோர் இடத்தில் "அற்பமான அணுவுக்கும் குறைந்தவர்கள்", என்றும் சொல்லிக் காட்டுகிறார். உலக இரட்சகர் ஸெய்யிதே ஆலம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பற்றி (அல்லாஹ் காத்துக் கொள்வனாக) அவர்கள் மவுத்தாகி மண்ணோடு மண்ணாகி போய்விட்டார்கள் என்றும் எழுதியிருக்கிறார்.

முடிவாக செருப்புக்கேற்ற ஜோடிச் செருப்பு வாய்ந்தது என்பதற்கொப்ப, முந்தின வஹ்ஹாபிய்யான முஹம்மது பின்

அப்துல்வஹ்ஹாப் நஜ்தி கிதாபுத் தௌஹீதில் எவற்றையெல்லாம் எழுதியிருந்தாரோ அவையனைத்தையும் (இல்லை அதற்கு மேலும்) இந்த மௌலவி இஸ்மாயீல் தெஹ்லவி தன்னுடைய **தக்வியத்துல் ஈமானில்** எழுதிவிட்டார். மேலும் வஹ்ஹாபிய்யக் கொள்கைகளைப் பரப்புவதில் இவரின் போக்கும் முஹம்மது இப்னு அப்துல் வஹ்ஹாபு கையாண்ட வழியாகவே இருந்தது.

நஜ்தி தன்னைப் பின்பற்றிய எல்லோரிடமும் பிரமாண வாக்கு (பை அத்து) எடுத்துக்கொண்டு மார்க்கத்தின் பெயரால் ஒரு கூட்டத்தைத் திரட்டி (ஜிஹாது) மத யுத்தத்தின் பெயரால் புறப்பட்டார். மௌலவி இஸ்மாயில் தெஹ்லவி தன்னுடைய குரு ஸெய்யிது அஹ்மது பரேலீ இடத்தில் (பைஅத்து) பிரமாணவாக்குக் கொடுத்து ஜிஹாதின் பெயரைச் சொல்லி ஒரு கூட்டத்தை உண்டாக்கினார். மார்க்க யுத்த வீரராக(முஜாஹிதாக) மைதானத்தில் வந்தார்.

என்னென்ன திட்டங்களை எல்லாம் சன்மார்க்கப் போர்வையில் மறைத்துக்கொண்டு இவர்கள் போர்புரியக் கிளம்பினார்களோ அல்லாஹுத ஆலாதான் அறிவான். கைசேதம், மன அபிலாசைகளெல்லாம் மனதுக்குள்ளேயே கிடந்து போய்விட்டது. குருவினுடையவும், சீடருடையவும் வழிகேடான கனவு நனவாகவில்லை. குருவும், சீடரும் (ஸெய்யிது அஹ்மது பரேலீ, மௌலவி இஸ்மாயில்) அன்றைய இந்திய ஆப்கான் எல்லை பிரதேசத்தில் முஸ்லீம்களை முஷ்ரிக்கள் என்று கூறி பெண்கள், பலவீனர்கள் வயோதிகர்கள் என மலைபிரதேச பட்டானியர்களை கொலை செய்தார்கள். இதை கேள்விப்பட்ட மற்றவர்கள் உலமாக்களிடம் முறையிட்டார்கள். உலமாக்கள் ஒன்று கூடி இவ்வளவு முஸ்லீம்களை கொன்றவனை கொல்ல பத்வா கொடுத்ததால் அம்மக்கள் அவ் இருவரையும் வெட்டி வீழ்த்தினார்கள். (ஆதாரம் - இம்தியாஸுல் ஹக்.)

**தக்வியத்துல் ஈமான் எனும் நூலில் காணப்படும் இஸ்லாமிய விரோத கொள்கைகளின் சில உங்கள் பார்வைக்கு**

1. எவன் யாரஸூலல்லாஹ், யா முஹிய்யதீன், யாகாஜா என்று சொல்வானோ அவன் காபிர் (பக்கம்:66-67)



2. நபிகள் நாயகம் அவர்களின் பரிசுத்த ரவ்ளாஷரீபை ஸியாரத்து செய்வதற்காக மட்டும் போவது ஷிர்க்காக்கும் – (பக்கம் 10,40)

3. ரஸூல் அவர்கள் ஷபாஅத்துச் செய்வார்கள் என்று யாராவது நம்புவானாகில் அவன் அசல் முஷ்ரிக்காகவும் மடையனாகவும் ஆவான் – (பக்கம் 25)

4. ரஸூல் அவர்கள் மரணித்து மண்ணோடு மண்ணாகி விட்டார்கள் (பக்கம்: 38)

5. மூத்த சகோதரனுக்குக் கொடுக்கும் மரியாதை அளவு தான் ரஸூல் அவர்களுக்குக் கொடுக்க வேண்டும் (பக்கம் : 50)

6. நாயகம் அவர்கள் ஒரு அற்ப அணுவை விடவும் குறைந்தவர்கள் (பக்கம் 45)

7. அல்லாஹ் பொய் சொல்ல முடியும் – அல்லாஹ் பொய் சொல்வது சாத்தியமாகும் (பக்கம் : 31)

(குறிப்பு : பொருளாதாரத்தின் ஏகபோகத்தால் வஹ்ஹாபிய நூல்கள் பல பதிப்புகள் போடுவதால் பக்கங்கள் மாற்றப்படுகிறது).

ஸெய்யிது அஹ்மது பரேலீ, மௌலவி இஸ்மாயில் இருவரையும் வெட்டி வீழ்த்திய பிற்பாடு இந்தியாவில் வஹ்ஹாபிய பிரச்சாரம் வெளிரங்கமாக எங்கும் தலைதூக்கியதாக காணப்படவில்லை. யாருமே வஹ்ஹாபியக் கொள்கையை ஏறிட்டும் பார்க்கவும் கூட விரும்பாதிருந்தனர்.

சில காலங்கழித்து வஹ்ஹாபியக் கொள்கையின் பால் அபிமானமுள்ள ஒரு சிலர் கிளம்பி அக்கொள்கையின் வீட்டைப் பராமரிக்க முயற்சி செய்தார்கள். வெளிரங்கத்தில் ஹனபி மதுஹபின் மஸ்அலாக்களை போதிக்கவும் அந்தரங்கத்தில் வஹ்ஹாபியக் கொள்கைகளைப் பரப்பவும் திட்டமிட்டு அதற்காக ஒரு மத்ரஸாவை நிர்மானிக்கவும் நாட்டங் கொண்டார்கள். அதன் படி இந்தியாவில் உத்திரபிரதேச மாநிலத்தில் உள்ள தேவ்பந்து என்ற ஊரில் தாருல்

உலூம் காஸிமிய்யா என்ற பெயரில் தேவ்பந்து மதரஸா ஏற்படுத்தப்பட்டது. மக்தப் மதரஸாவுக்கு உஸ்தாது தேவையாய் இருந்தது தாம் சுன்னத் ஜமாஅத்து தான் என்று ஊர்க்காரர்களை ஏமாற்றி நடித்து அந்த மதரஸாவை அபகரித்த மௌலவி காஸிம் நானுத்தவி என்பவர் பிரிட்டிஷ் வெள்ளையர்களின் சதி ஆலோசனைப்படி சின்ன மதரஸாவை தமது பெயரில் தாருல் உலூம் காஸிமிய்யா என்று பெயர்பெரும் அளவிற்கு பணபலம் கொண்டு பெரிதுபடுத்தினார். இந்த தேவ்பந்து வஹ்ஹாபிகள் தத்தமது மதரஸாக்களை இப்படி ஏமாற்றித்தான் ஆரம்பித்தார்கள். அதற்காக பல உதாரணங்கள் உண்டு பாக்கியாத்திருந்து 1940களில் வெளியேற்றப்பட்ட தேவ்பந்து வஹ்ஹாபிய கொள்கை கொண்ட அமானி ஹஜ்ரத் என்பவர் லால்பேட்டை மதரஸா நிறுவியதும் அதேபோல் தேவ்பந்து தப்லீக் ஜமா அத்தால் ஏற்பட்ட பிரட்சனையால் 1960ல் வெளியேற்றப்பட அபூசவூது ஹசரத் பெங்களூர் மதரஸா திறந்ததும், சேலத்திற்கு வந்த இரண்டு தேவ்பந்து யுபிவாலாக்கள் ஜமாஅத்தை இரண்டாக்கி ஊர்பைத்துல்மால் பணத்தைக் கொண்டு தங்களது குடும்பத்து பெயரில் மதரஸா திறந்து கொண்டதும் தேவ்பந்து செய்த துரோகத்துக்கு எடுத்துக்காட்டுகள். (இந்தக் காசிம் நானுத்தவி தான் ரஸூலுல்லாவிற்கு இறுதிநபி என்பது சிறப்பல்ல என்று காத்தமுன் நபி என்ற சுன்னத்துவல் ஜமாஅத் கொள்கைக்கு மாற்றமாக கூறியதால், மிர்ஸா குலாம் அஹ்மத் காதியானி என்பவன் முஹம்மது நபிக்கு பின் நான் நபி என்பதற்கு இதுவும் ஓர் ஆதாரம் என்று கூறியது குறிப்பிடத்தக்கது).

## 4. தேவுபந்தி என்று அழைக்கப்படுபவர் யார்?

தேவுபந்தி என்பவர் யார் என்பதை விளக்குகிறேன். வஹ்ஹாபிகள் இரு கூட்டத்தினர்களாவார்கள்.

ஒரு கூட்டத்தார் வஹ்ஹாபிக் கொள்கையின் ஸ்தாபகரான முஹம்மது இப்னு அப்துல் வஹ்ஹாபு நஜ்தியையும், வஹ்ஹாபி



கொள்கையை இந்தியாவில் முதன் முதலாகப் பரப்பிய இஸ்மாயில் திஹ்லவியையும் முற்றிலும் பின்பற்றிய கைற முகல்லிது (இமாம்களைப் பின்பற்றாது) வஹ்ஹாபிகளாவார்கள்.

இரண்டாவது கூட்டத்தார் முற்றிலும் கொள்கை விசயத்தில் முதல் கூட்டத்தாரை பின்பற்றி நடப்பதோடு கிரியைகள் விசயத்தில் மத்ஹபு இமாம்களைப் பின்பற்றி தங்களை ஹனபி, ஷாபிஈ, மாலிகி, ஹம்பலி என்றும் சொல்லக் கூடிய முகல்லிது வஹ்ஹாபிகளாவார்கள். இவர்களின் தலைவர்கள் முஹம்மது காசிம் நானூத்தவி, றஷீது அஹ்மது கொங்கோஹி, கலீல் அஹ்மது அம்பேட்டி, அஷ்ரப் அலிதானவி ஆகியோர் ஆவார்கள். இவர்கள் தேவுபந்து எனும் நகரிலுள்ள தாருல் உலூம் காசிமிய்யா எனும் மதரஸாவின் ஸ்தாபரும் அதன் பிரதான ஆசிரியர்களுமாக, இருந்து அம்மதரஸாவில் இந்தக் கெட்ட கொள்கைகளைப் போதித்துப் பரப்பி வந்ததினால் அவர்களுக்கும் அவர்களைப் பின்பற்றியவர்களுக்கும் இவர்கள் எத்தேசத்தினரானாலும் சரியே தேவு பந்திகள் என்று அழைக்கப்படுவார்கள்.

**– அல்லாமா அஷ்ஷெய்கு அப்துல் காதிர் ஸுபி கத்த ஸல்லாஹு ஸிர்றஹுல் அஜீஸ் – நூல் காதியானி தேவ்பந்தி சம்பாசனை**

தேவ்பந்திய வஹ்ஹாபிய சித்தாந்தத்தை பின்பற்றிய மௌலானா காஸிம் நானோத்வி வஹ்ஹாபிய கொள்கையை பரப்புவதற்கென ஒரு பீடமாக தாருல் உலூம் காஸிமியா என்ற அரபிகலா சாலையை தேவ்பந்த் என்ற ஊரில் 1870 ல் துவக்கியவர்களில் ஒருவர் இந்த பாடசலையைத்தான் ஊரின் பெயரால் தாருல் உலூம் தேவ்பந்த் என்று அழைக்கின்றனர்.

வஹ்ஹாபிய சித்தாந்தத்தை பரப்புவதற்கென பாடுபட்டு, வெற்றிகண்ட தேவ்பந்திய மௌலானாக்களில் முக்கியமானவர்கள்.

1. முஹம்மது காஸிம் நானோத்வி (தேவ்பந்தில் அரபி பாடசாலையை

துவக்கியவர் "தஹ்தீருன்னாஸ்" நூலின் ஆசிரியர்)

2. ரஷீத் அஹமது கங்கோஹி (ஃபதாவாயே ரஷீதிய்யா என்ற வஹ்ஹாபிய நூலை எழுதியவர்) (கி.பி. 1828 – 1903)

3. கலீல் அஹமது அம்பேட்டி (பராஹீனே காத்திஆ நூலின் ஆசிரியர்) (கி.பி. 1849 - 1925)

4. அஷ்ரப் அலி தானவி (பிஹிஷ்தி ஜேவர், ஹிப்ளுல் ஈமான் என்ற தவறான கொள்கை நூலின் ஆசிரியர்.(கி.பி. 1860 - 1943)

5. மௌலவி முஹம்மது இல்யாஸ் காந்தலவி (தப்லீகு ஜமாத்தின் ஸ்தாபகர்) (கி.பி. 1883 - 1944)

வஹ்ஹாபிய தீய தீவிரவாத கொள்கைகளை மக்களிடையே பரப்புவதற்கென நிறுவப்பட்ட பாடசாலையும் அக்கொள்கைகளை சரியென்று ஏற்று மனம் போன போக்கில் மேற்கண்ட நூல்களை எழுதி அந்த நூல்கள் யாவும் சரியென சான்றளித்த மேற்கூறப்பட்ட நபர்களும் வழிகேட்டிற்கு காரணமானவர்கள். இவர்கள் அனைவரும் ஒரே குட்டையில் ஊறிய மட்டைகள், அப்துல் வஹாப் நஜதியின் கொள்கைக்கு ஊதுகுழலாக செயல்பட்டு வந்த தேவ்பந்திய வஹ்ஹாபிகள்.

## 5.மௌலவி காசிம் நானுத்தவி

**(தேவ்பந்த் மதரஸாவின் ஸ்தாபகரும், தேவ்பந்திய கூட்டத்தின் முதல் இமாமும் ஆவார்.)**

தேவுபந்து மத்ரஸா ஸ்தாபகர் மௌலவி முஹம்மது காஸிம் நானுத்தவீ என்பவர் தன்னுடைய "தஹ்தீருன்னாஸ்" என்ற நூலின் 2,3-ம் பக்கத்தில் எழுதியுள்ளார்.

"சாமானிய ஜனங்களின் அபிப்பிராயத்தில் ரஸூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் காத்தமுன்னபிய்யீன் என்பதற்கு பொருள், அவர்கள் இறுதி நபியாக இருக்கும். அவர்களுக்குப் பின்பு வேறு நபி இல்லை என்பதாகும். ஆனால் காலத்தில் முந்துவதிலோ, பிந்துவதிலோ தனி விசேமில்லை என்பது புத்திமான்களுக்கு விளங்கும்".



அவருடைய இக்கூற்றுக்கு கருத்தாவது: காத்த முன்னபிய்யீன் என்பதற்கு இறுதி நபி என்று பொருள் கொள்வது சாமானியர்களான மடையர்களுடைய கொள்கையாகும். புத்திமான்களுடைய கொள்கையல்ல. நபி நாயகத்தின் வரிசைக்கும் இந்தக் கருத்திற்கும் ஒருவகையான சம்பந்தமும் இல்லை என்பதாகும்.

சங்கையான ஸஹாபாக்களும், மேதைகளான இமாம்களும், முன்னோர்களான உலமாக்களும், வரிசையான முஹத்தி ஸீன்களும், நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இறுதி நபி. அவர்களுக்கு பின்பு வேறு நபி இல்லை என்ற கருத்தை தான் சொல்லியிக்கிறார்கள். ஆனால் மௌலவி முஹம்மது காசிம் நானுத்தவி எல்லாத் தப்ஸீருடைய உலமாக்களுக்கும் மாற்றமாக தனது சொந்த அபிப்பிராயப்படி வியாக்கியானம் செய்து தன் கருத்தை பின்வருமாறு 12,13.ம் பக்கத்தில் விபரிக்கிறார்:

"மேலும் நபி நாயகத்திற்குப் பின் வேறொரு நபி உண்டானார்கள், உண்டாவார்கள் என்று வைத்துக் கொண்டாலும் காத்தமுன் னபிய்யீன் என்பதில் யாதொரு வித்தியாசமும் உண்டாகாது.-"தஹ்தீருன்னாஸ்" மௌலவி முஹம்மது காஸிம் நானுத்தவீ

ஸுன்னத்து ஜமா அத்துக்களாகிய நம்முடைய கொள்கை யாகிறது, நபி நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எல்லோர்களிலும் இறுதி நபியாக இருக்கும். அவர்களோடு நுபுவ்வத்தின் வாசல் அடைக்கப்பட்டு விட்டது. இனி யாராகிலும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குப்பின் தான் நபி என்று தாவாச் செய்வானேயானால் அவன் பொய்யனும் காஃபிரும் தஜ்ஜாலுமானவான் என்பதாக இருக்கும்.

ஹதீது ஷரீபில் வந்திருக்கிறது: நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் திருவுளமாயிருக்கிறார்கள்.

நான் ஆக்கிபுவாக இருக்கிறேன். ஆக்கிபு என்பது அவருக்குப் பின்பு வேறு நபியில்லையே அத்தகைய நபியாகும்.

நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குப்பின் எக்காலத்திலும், எந்த பூமியிலும் எந்த நபியும் வரப் போவதில்லை என்பது குர்ஆன்ஹதீஸ் அடிப்படையில் அமைந்த ஒட்டுமொத்த உலக முஸ்லிம்களின் இஜ்மாஃவான கொள்கையாகும்.

நபிமார்கள் அவர்களின் உம்மத்துக்களை விட கல்வி ஞானத்தில் மட்டும்தம் தான் மேன்மையானவர்கள் அமல்கள் என்று வரும் போது உம்மத்துக்கள் சில நேரங்களில் நபிமார்களுக்கு சரிசமமாகி விடுவார்கள் (அ) நபிமார்களையும் முந்தி விடுவார்கள்- "தஹ்தீருன்னாஸ்" மௌலவி முஹம்மது காஸிம் நானூத்தவீ (நவூதுபில்லாஹ்)

பார்த்திர்களா! இதுதான் தேவ் பந்திகள் நபிமார்கள் மீது கொண்ட ஈமானாகும். அதனால் தான் சாமானிய ஜனங்களை நீங்கள் நபிமார்களின் வேலை செய்யக் கூடியவர்கள் என்று ஏமாற்றி தன் இயக்கத்திற்கு வலு சேர்க்கிறார்கள்.

எக்காலத்திலும் உம்மத்துகள் நபிமார்களை விட உயர்ந்தவர்களாக முடியாது என்பதே சுன்னத் வல் ஜமாஅத்தின் கொள்கையாகும்.

## 6. மௌலவி ரஷீத் அஹ்மத் கங்கோஹி

**(தேவ்பந்திய கூட்டத்தின் இரண்டாவது இமாமும், தப்லீக் ஜமாஅத்தின் ஸ்தாபகர். மௌலவி இல்யாஸ் காந்தலவியின் முதல் குருவும் ஆவார். இவரிடமே மௌலவி இல்யாஸ் 10 வருடங்கள் கல்வி பயின்றுள்ளார்)**

“முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தியைப் பின் பற்றுபவர்கள் வஹ்ஹாபிகள் என்றழைக்கப்படுகின்றனர். அவரது கொள்கைகள் மிகவும் உயர்ந்தவை. அவருடைய மத்ஹபு ஹன்பலியாகும். அவரது



குணத்தில் சற்று கடுமை இருந்தது. அவரைப் பின்பற்றுவோர் மிகவும் நல்லவர்கள் ”.

(ஆதார : பதாவா ரஷீதிய்யா – பாகம் – 3 பக்கம் – 79

“முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாபை ஜனங்கள் வஹ்ஹாபி என்றழைக்கின்றனர். அவர் மிகவும் நல்லவர் ஹன்பலி மத்ஹபைச் சார்ந்தவரெனக் கேள்விப்படுகிறேன். மேலும் அவர் ஹதீஸின்படி முழுக்க முழுக்க நடப்பவராயிருந்தார். பித்அத் (அனுச்சாரம்) மற்றும் ஷிர்க் (இணைவைத்தல்) குகளைத் தடுத்தார்”.

(ஆதாரம் – பதாவா ரயஷீதிய்யா – பாகம் – 3 பக்கம் – 119

திருத்தூதுவ நிந்தனையாளர்களையெல்லாம் ஒன்று திரட்டிக்கொண்டு மக்கா, மதீனா போன்ற புனித நகரங்களில் நுழைந்து தமது அராஜகத்தை அழிச்சாட்டியத்தை அவிழ்த்து விட்ட அதே முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தி தான், ஆம்! இஸ்லாத்தின் அறிஞர் பெருமக்களான உலமாக்களையும் அண்ணலாரின் வழித் தோன்றல்களான குடும்பத்தினரையும் கொஞ்சங்கூட ஈவிரக்கமின்றி கொன்று குவித்த கூட்டத்தின் தலைவன் முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தியைப் பற்றித்தான் மௌலவி கங்கோஹி ஸாஹிப் மேற்கண்டவாறு நற்சாட்சிப் பத்திரம் தருகிறார்.

“**தக்விய்யதுல் ஈமான்** என்னும் நூல் மிகவுயர்ந்த ஓர் நூலாகும். ஷிர்க் மற்றும் பித் அத்தை எதிர்ப்பதில் அதற்கு இணை எதுவும் கிடையாது. இதில் காணப்படும் ஆதாரங்களனைத்தும் கிதாபுல்லாஹ்–வாகிய திருக்குர் ஆனிலிருந்தும், ஹதீஸிலருந்துமே எடுக்கப்பட்டுள்ளன. இந்நூலை (தக்விய்யதுல் ஈமானை) வைத்திருப்பதும், அதனைப் படிப்பதும் அய்ன்–இஸ்லாமாகும். (அதுதான் உண்மையான மார்க்கமாகும்.) ”

(ஆதாரம் – பாதாவா ரஷீதிய்யா – பாகம் – 1 – பக்கம் 115)

வஹாபியை புகழோபுகழ் என புகழ்பவர் வஹாபிதானே.

இந்திய வஹ்ஹாபிய குழுவின் தலைவர் இஸ்மாயீல் தெஹ்லவீயை பின்பற்றி முதலாவதாக அல்லாஹ் பொய் சொல்லுவது இடம்பாடுதான் (சாத்தியம்தான்) என்று சொன்னார். பின்னர் அவர் கையொப்பத்தோடு ஒரு பத்வா (இது பம்பாயில் அச்சடிக்கப்பட்டது அதை பல போட்டோ காப்பிகள் எடுக்கப்பட்டது. மதீனா ஷரீபிலும் ஒரு காப்பி இருக்கிறது) அதில் அவர் சொல்கிறார் "அல்லாஹ் பொய் சொன்னதாக நம்பி, அல்லாஹ் பொய் சொல்லி விட்டான், இந்த குறைபாடு அல்லாஹவிடத்தில் ஏற்பட்டுவிட்டது. என்று ஒருவன் சொன்னால் அவனை காபீர் என் சொல்லுவது இருக்கட்டும். அவனை பாஸிகு (கெட்டவன்) என்று கூட சொல்லாதீர்கள். ஏனென்றால் அநேக உலமாக்கள் அப்படி அவன் சொன்னது போல் சொல்லியிருக்கிறார்கள்".

இவ்வாறு அல்லாஹ்வின் பரிசுத்ததின் மீதே இந்த தேவ்பந்தி ஆலிம் குறை காணுகின்றார். இதன் காரணமாகவே இவர் மீது காபிர் என பத்வா கொடுக்கப்பட்டது

. இன்னும் இவர் வழிகெட்ட வஹ்ஹாபிய்ய ஜமாத்தின் தலைவர் முஹம்மத் பின் அப்துல் வஹ்ஹாப் நஜதியை நல்லவர் என்றும் வல்லவர் என்றும் புகழ்ந்து தள்ளுகிறார். அந்த வழிகேடன் எழுதிய கிதாப் தௌஹீத் எனும் நூலில் உருது மொழியெர்ப்பு தக்வியத்துல் ஈமான் எனும் நூலை ஒவ்வொரு முஸ்லீமும் படிப்பதும் பின்பற்றுவதும் அவசியம் என்றும் வஹ்ஹாபிய்யத்திற்கு வக்காலத்து வாங்குகிறார். இன்னும் மீலாது நபி கூடாது, ஷீரனி போன்ற நேர்ச்சைகளை சாப்பிடுவது ஹராம், ஆனால் காகத்தை சாப்பிடுவது கூடும் என்று பல தவறான பத்வாக்கள் கொடுத்தவர். இவை அனைத்தையும் பதாவா ரஷீதிய்யா எனும் நூலில் காணலாம்.

## 7.மௌலவி கலீல் அஹ்மத் அம்பேட்டி

**(தேவ்பந்திய கூட்டத்தின் மூன்றாவது இமாமும், தப்லீக் ஜமாஅத்தின் ஸ்தாபகர் மௌலவி இல்யாஸ் காந்தலவியின் இரண்டாவது குருவும் ஆவார்)**



"பராஹீனே காத்திஆ" என்ற நூலை கலீல் அஹ்மத் அம்பேட்டி வெளியிட்டார். அதில் பல தவறான கொள்கைகள் பேசப்பட்டிருப்பதுடன் கீழ்கண்டவாறும் கூறப்பட்டுள்ளது.

" ஷைத்தானுக்கும், மலக்குல் மவ்த்தான இஜ்ராயீல் அலை ஹிஸ்ஸலாமுக்கும் எல்லா மனிதர்களின் நிலையையும் அறியக்கூடிய கல்வி இருக்கிறது என்று கூறுவது சரியானது. ஏனெனில் ஷைத்தானுக்கும், இஜ்ராயீல் அலைஹி ஸலாம் அவர்களுக்கும் எல்லா மனிதர்களின் நிலையையும் அறியும் கல்வி இருப்பது குர் ஆனில் தெளிவாக சொல்லப்பட்டிருக்கிறது.

ஆனால் நபிகளாருக்கு அந்தளவிற்கு அறிவு உள்ளதற்கு குர் ஆனில் என்ன ஆதாரமிருக்கிறது? "(பராஹீனே காத்திஆ பக்கம் 51)

நஊதுபில்லாஹ் ! அல்லாஹ் காப்பாற்ற வேண்டும் நபிகளாரின் இல்ம் கல்வி ஞானத்தில் குறைகாண்பதில் எப்படி துணிச்சல் வந்திருக்கிறது பாருங்கள்!

நாயகமே! தாங்கள் அறிந்திராத அனைத்தையும் தங்களுக்கு கற்பித்து விட்டோம் என்றும், மேலும்பல வசனங்களின் மூலமும், சஹீஹான ஹதீஸ்களின் மூலமும் கல்வியில் நபிகளாரை விஞ்சியவர் எவருமில்லை. அல்லாஹ்வின் படைப்புக்களிலேயே, நபிமார்களிலேயே மிக மிக மேன்மைக்குரியவர்களும், மிக மிக அதிகமாக கல்வி, ஞானம் வழங்கப்பட்டவர்களும் நமது கண்மனி நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே என்பதை தெளிவாகச் சொல்லப்பட்டிருப்பதும், அதுவே ஒட்டுமொத்த இஸ்லாமியர்களின் கொள்கையாக இருந்தும், இவர் ஷைத்தானின் அறிவை நாயகத்தின் ஞானத்திற்கு ஒப்பிடுவது எவ்வளவு மடமை.

நபிகளாரின் கல்வி, ஞானத்தோடு அல்லாஹ்வின் சாபத்திற்குரிய ஷைத்தானின் கல்வியை ஒப்பிடுவதே மிகப் பெரிய வழிகேட்டுத்தனமில்லையா? அதிலும் ஷைத்தானுடைய கல்வியை விட

நபிகளாரின் கல்வி, ஞானம் அதிகம் என்பதற்கு ஆதாரமில்லை என்று கூறியிருப்பது எவ்வளவு பெரிய வழிகேடு?

இறுதி நபித்துவத்திற்கும், எல்லா படைப்புகளை விடவும் அதிக கல்வி, ஞானம் பெறுவதற்கும் நமது ரஸூல் எந்த விதத்தில் குறைந்து போய் விட்டார்கள்? நம் ரஸூல் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை தரந்தாழ்த்திப் பேசுவதற்கு எப்படி அவர்களுக்கு தைரியம் வருகிறது? இதன் காரணமாகவே இவர் மீது காபிர் என பத்வா கொடுக்கப்பட்டது.

ஹி 1306 பாலாபூரில் ஒரு விவாத அரங்கில் மௌலானா குலாம் தஸ்தகீர் குசாரி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் பராஹீனே காத்திஆ வில் கூறப்பட்ட இது போன்ற தவறான கொள்கைகளுக்கு பதிலடி கொடுத்து அப்போதே கலீல் அஹ்மத் அம்பேட்டியை வாயடைக்கச் செய்துவிட்டார்கள் என்பதையும் நினைவுப்படுத்துகிறோம்.

## 8.மௌலவி அஷ்ரப் அலி தானவி

**(தேவ்பந்திய கூட்டத்தின் நான்காவது இமாம். தப்லீக் ஜமாஅத்தின் மூலம் அஷ்ரப் அலி தானவியின் கொள்கையை பரவலாக்க விரும்புகிறேன் என்று தப்லீக் ஜமாஅத்தின் ஸ்தாபகர் மௌலவி இல்யாஸ் காந்தலவி யாரை குறித்து பேசினாரோ, அந்த நபரே இவர்.)**

ஹி 1319 கி.பி 1901ல் அஷ்ரப் அலி தானவி ஹிப்ளுல் ஈமான் எனும் ஒரு நூலை எழுதி வெளியிட்டார். அதில் எழுதுகிறார்.

"நபிகளாருக்கு மறைவான விசயங்களை அறியக் கூடிய ஞானம் உண்டு என்று ஏதோ ஒரு ஆதாரப்படி எடுத்துக் கொண்டாலும் நபிகளாருக்கு மறைவான விசயங்கள் எல்லாமே தெரியுமா? அல்லது ஒரு சில விசயங்கள் மட்டும் தான் தெரியுமா? ஏனெனில் ஒரு சில விசயங்கள் தான் தெரியும் என்று எடுத்துக் கொண்டால் அதில் நபிகளாருக்கு என்ன தனிச் சிறப்பு இருக்கிறது? ஒரு சில மறைவான விசயங்கள் சாதாரண மனிதர்கள், குழந்தைகள், பைத்தியங்கள் இவ்வளவு ஏன் கால்நடைகள், மிருகங்களுக்குக் கூட தெரியுமே!" (ஹிப்ளுல் ஈமான்/பக்கம் -8)



எந்த நபிக்கு முன்னால் முந்திக் கொண்டு பேசினாலோ, சப்தமிட்டுப் பேசினாலோ செய்த நன்மைகள் எல்லாம் அழிந்துவிடுமோ, எந்த நபிக்கு முன் வாய்திறந்தது பேசுவதற்குக் கூட சஹாபாக்கள் அச்சப்பட்டார்களோ, எந்த நபிக்கு முன் வானவர்கள் கூட மிக மிக கவனத்துடன், ஒழுக்கத்துடன் நடந்து கொண்டார்களோ அந்த நபியுடைய கல்வியின் விசயத்தில் கொஞ்சம் கூட கண்ணியமில்லாமல், ஒழுக்கமில்லாமல், பைத்தியம், மிருகம், கால்நடைகளின் கல்வி, விசயத்தோடு சம்பந்தப்படுத்திப் பேசக் கூடிய மிக மோசமான வழிகேட்டில் உள்ளவர்கள்தான் தேவ்பந்தீய (தப்லீக்) உலமாக்கள். இதன் காரணமாகவே இவர் மீது காபீர் பத்வா கொடுக்கப்பட்டது.

அஷ்ரப் அலி தானவியிடம் இதுவரை பைஅத் செய்து கொள்ளாத ஒருவர் ( பைஅத் ) செய்து கொள்ள வேண்டும் என்று நினைக்கிறார். தன் கனவில் கண்டதை அஷ்ரப் அலிக்கு கடிதம் எழுதுகிறார். ..

கனவில் லாஇலாஹா இல்லலாஹு முஹம்மதுர் ரஸூலுல்லாஹ் என்பதற்குப் பதிலாக அஷ்ரப் அலியின் பெயரை ஓதுகிறார். கனவின் நிலையிலேயே இது தவறு என்று அவர் மனதில் தோன்றுகிறது. ஆனால் இதே போன்று இரண்டு மூன்று முறையும் முஹம்மதுர் ரஸூலுல்லாஹ் என்பதற்கு பதிலாக அஷ்ரப் அலியின் பெயரையே அவர் நாவு உச்சரிக்கிறது. மேற்கொண்டு அவர் எழுதுவதையும் அதற்கு அஷ்ரப் அலி தரும் பதிலையும் பாருங்கள்.

எனவே நான் தூக்கத்திலிருந்து எழுந்து இந்த நினைவு மனதை விட்டுப் போக வேண்டும் என்று திரும்பிப் படுத்துக் கொண்டு நாயகத்தின் மீது ஸலவாத் ஓதி என் தவறுக்கு பரிகாரம் காண முயலுகிறேன். ஆனால், அப்போதும் அல்லாஹும்ம ஸல்லி அலா ஸய்யிதினா வநபியினா வ மௌலானா அஷ்ரப் அலி என்றே நாவில் வருகிறது. நான் தூங்கிவிடவில்லை! விழித்துக்கொண்டேதான் இருக்கிறேன்! ஆனால், நான் சுய இஷ்டத்தோடு இல்லை! கட்டுண்டவனாக இருக்கிறேன்! நாவும் எனது இஷ்டத்தில் இல்லை!

இக்கடிதத்திற்கு அஷ்ரப் அலி தானவி பதில் தருகிறார்......

இந்த நிகழ்ச்சியில் உங்களுக்கு ஆறுதல் கூறப்பட்டுள்ளது. அதாவது நீங்கள் யாரின் பால் செல்ல நாடுகிறீர்களோ அவர் (அஷ்ரப் அலி) சுன்னத்தை பின்பற்றியவரே ஆவார்.

நூல்: அல் இம்தாத், பக்கம்: 35

கண்மணி நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு பின் நபியும் இல்லை ரஸூலும் இல்லை தன்பேரில் கலிமா சொல்லியதை ஆதரிப்பதினாலும் இவ்விதமான கருத்தை ஆமோதித்ததினாலும் இவரும் நபித்துவத்திற்கு தாவா செய்தவராகிறார்.

இவரின் கொள்கைகளை பரப்பத்தான் மௌலானா இல்யாஸ் தப்லீக் ஜமாத்தை ஏற்படுத்தினார். ஹஜ்ரத் மௌலானா தானவீ (ரஹ்) அவர்கள் மிகவும் பெரிய வேலை செய்திருக்கிறார்கள். எனது மனம் விரும்புகிறது. கல்வி, ஞானபோதனை அவர்களுடைய தாகவும், (அஷ்ரப் அலி) தப்லீக் முறை என்னுடையதாகவும் இருக்கட்டும். ஏனென்றால், இவ்வாறு அவர்களுடைய போதனை பொதுவாக ஆகிவிடும்.

பழைய தமிழ் மல்பூஜாத் பக்கம் : 72

புதிய தமிழ் மல்பூஜாத் பக்கம் : 64

தலைப்பு எண் : 56

## 9. மௌலவி இல்யாஸ் காந்தலவியும் தப்லீக் ஜமாஅத்தும்

தப்லீகு ஜமாஅத்தின் ஸ்தாபகர் மௌலவி இல்யாஸ் வஹ்ஹாபிய்ய உலமாக்களுடைய சகவாசத்திலும் அவர்களுடைய கண்காணிப்பிலும் இருந்தார். அவர்களுடைய (வஹ்ஹாபிய்ய) மத ஆர்வத்திலேயே வளர்ந்தார். அவர்களுடைய குணங்களையே (கொள்கைகளை) பூண்டார் என்பது எல்லோராலும் ஒப்புக்கொள்ளபட்டதாகும்.



அவர் பூரணமாக பத்து வருட காலத்தை வஹ்ஹாபிகளுடனேயே கழித்திருக்கிறார். ஆரம்பகாலத்தில் வஹ்ஹாபிகளுடைய சற்குரு மௌலவி றஷீது அஹ்மது காங்கோஹி இடத்தில் (முரீதானார்) தீட்சை பெற்றார்.

அவர் காலம் சென்றபின் மற்றொரு பிரபல்யமான வஹ்ஹாபி மௌலவி கலீல் அஹ்மது இடத்தில் அவர் பைஅத்துச் செய்தார். மௌலவி இல்யாஸ் ஸாஹிபு சில காலம் ஸஹாரன்பூரில் வஹ்ஹாபிய்யாக்களின் பிரபல்யமான மளாஹிருல் உலூம் என்ற மத்ரஸாவில் (முதர்ரிஸ்) ஆசிரியராகவும் இருந்தார்.

**தப்லீக் முறை கனவில் அருளப்பட்டது:**

மௌலவி இல்யாஸும் தனக்கு இந்த தப்லீகு முறை கனவில் அருளப்பட்டது என்று சொல்கிறார். அவருடைய மல்பூளாத்து 40-வது பக்கத்தில் கூறப்பட்டுள்ளது.

அவர் (இல்யாஸ்) சொன்னார் “இந்தத் தப்லீக்கின் முறை எனக்கு கனவில் வெளியாயிற்று” அல்லாஹ்வின் திருவசனமான குன்தும் கைற உம்மதின் .............. ஜனங்கள் அளவில் அனுப்பப்பட்ட விஷேச உம்மத்தாக நீங்கள் ஆகிவிட்டீர்கள். நீங்கள் நல்லவற்றைக் கொண்டு ஏவவும், கெட்டவற்றை விட்டு விலக்கவும் அல்லாஹ்வைக் கொண்டு ஈமான் கொள்ளவும்..... என்ற திருமறை வசனத்திற்கு வியாக்கியானம் நீவிர் நபிமார்களைப் போன்றவர் உம்மை ஜனங்களுக்காக வெளியாக்கப்பட்டது என்பதாக கனவில் எனக்கு அறிவிக்கப்பட்டது.

மேலும், இல்யாஸ் தன்னுடைய கனவில் "குன்தும் கைர உம்மத்தின்" என்ற திருமறை வசனத்தின் வியாக்கியானம்: நீவிர் நபிமார்களைப் போன்றவர். உம்மை ஜனங்களுக்காக வெளியாக்கப்பட்டது. என்று அறிவிக்கபட்டதாக சொல்வதனால் அவரும் நபித்துவத்தை தாவாச் செய்ய ஆசிக்கிறார். என்னிப் பார்க்கிறார் என்பதும் விளங்கவில்லையா? ஏன் அவருக்கு மாத்திரம் அந்த ஆசை வராதிருக்கும்? அவருடைய ஆசிரியரும் குருவுமான

றஷீது அஹ்மது காங்கோஹிக்கு அந்த ஆசை வரவில்லையா? அவரின் தக்கிறதுர்றஷீது இரண்டாம் பாகம் 17வது பக்கத்தில் "இக்காலத்தில் நேர்வழியும் ஈடேற்றமும் என்னைப் பின்பற்றுவதின் பேரிலேயே தரிப்பட்டிருக்கிறது" என்னு சொல்கிறார்.

இன்னமும் இல்யாஸுடைய ஆசிரியரான தேவுபந்தி. ஹகீமுல் உம்மத் என்று அழைக்கப்படும் அஷ்றபு அலி தானவியைத்தான் அந்த ஆசை விட்டதா? அவரின் முரிதுகளிலொருவர் கனவிலும், அப்பால் விழிப்பிலும் என்று பலமுறை ஓதிக்கொண்டிருந்ததைப் பற்றி குரு தானவிக்கு எழுதிக்கேட்க உம்முடைய இச்சம்பவத்தில் நன்மாராயமிருக்கிறது. நீவிர் எவர் பக்கம் மீளுகிறீரோ அவர் (தானவி) மார்க்கத்தை த் தொடர்ந்தவராக இருக்கும் என்று மாத்திரமே பதில் எழுதி சீடரின் அச்செய்கையை சரி கண்டாரா இல்லையா?

இதற்காகத்தான் இவர்களின் ஆசிரியப் பெரியார் முஹம்மது காசீம் நானுத்தவி என்பவர் நபிகள் நாயகம் அவர்களை (காத்த மன்னபிய்யீன்) அவர்களுக்குப் பின்பு வேறு நபி இல்லை. அவர்களோடு நபித்துவத்தின் வாசல் அடைப்பட்டுவிட்டது என்பதற்கு மாற்றமாக அவர் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு பின்பு வேறு நபி வந்தாலுங் கூட நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் காத்தமுன்னபிய்யீன் என்பதற்கு வித்தியாசம் ஏற்படாது என்று சொல்லி நபித்துவத்தின் கதவைத் திறந்து வைத்தார் போலும்.

## 10.தேவ்பந்திகள் ஆங்கிலேய கைக்கூலிகள்

மௌலவி ஸையித் அஹ்மத் பரேலவீ என்பவர்.இவருடன் இவரது சிஷ்யர் இஸ்மாயில் திஹ்லவியும் சேர்ந்து தங்களது வஹ்ஹாபியக் கொள்கைகளை முஸ்லிம்களிடையே பரப்பவும், ஆங்கிலேயே அரசிற்கு கூலியாக செயல்பட்டனர். இவர்களின் கொள்கைகள் மிக மோசமானதாக இருந்ததால் பட்டான் முஸ்லிம்களால் துண்டு துண்டாக வெட்டி கொல்லப்பட்டு தூர வீசப்பட்டனர்.



ஆனால் இவர்களை இந்த தரீக்காவினரும், தப்லீக் இயக்கத்தினர்களும் 'ஷஹீது' என்கின்றனர். இவர்கள் ஷஹீதாவதற்கு முஸ்லிகளின் எதிரிகளோடு ஜிஹாத் செய்தார்களா? என்றால் இல்லை என்றே பதில் கிடைக்கிறது. மேலும் அப்போது சுதந்திரத்திற்காக பாடுபட்ட இந்தியர்களுக்கு எதிராகவும், ஆங்கிலேயே அரசுக்கு ஆதரவாகவும் செயல்பட்டனர் என்பதை இவர்கள் எழுதிய புத்தகங்களிலிருந்து எடுத்துக் காட்டி ' பாஸ்பான் ' எனும் பத்திரிக்கை ஆசிரியர் மௌலானா முஸ்தாக் அஹ்மத் சாஹிப் நிஜாமி (இலாஹாபாதி) அவர்கள் எழுதிய நூலானா
' கூன்கே ஆன்ஸு ' (இரத்தக் கண்ணீர்) எனும் நூலிலிருந்து பார்த்தால் உண்மை புரியும். அதன் ஆதாரங்களை இங்கே தருகிறேன்.

1. ஸையத் சாஹிப்(பரேலவியுடன் முஜாஹிதீன்கள் ஒன்று திரள ஆரம்பித்தனர். உடன் மௌலானா இஸ்மாயீல் (திஹ்லவி) உடைய ஆலோசனையின் பேரில் இலாஹாபாத்தைச் சார்ந்த செல்வந்தர் ஷைகு குலாம் அலியவர்கள் மூலம் தொடர்பு கொண்டு வடமேற்கு மாகாண லெப்டினட் கவர்னருடைய சமூகத்திற்கு நாங்கள் சீக்கியர்களுடன் ஜிஹாத் செய்ய ஆயத்தம் செய்து கொண்டிருக்கிறோம். இதில் ஆங்கிலேயே அரசுக்கு ஆட்சேபனை ஏதுமில்லையே! என்று கேட்டோம். அதற்கவர்கள்....எங்களின் செயல்திட்டம் மற்றும் அமைதிக்கு எவ்வித பங்கமும் ஏற்படாதிருக்குமேயானால் நமக்கு எவ்வித ஆட்சேபனையும் இல்லை என்று லெப்டினட் கவர்னர் சாஹிப் தெளிவாக எழுதிவிட்டார்.

நூல்:- ஹயாத்துத் தைய்யிபா பக்கம் 302 தொகுப்பு: மீர்ஜா ஹஸ்ரத் தெஹ்லவி.

இந்திய நாட்டை அப்போது ஆக்கிரமித்து அட்டூழியங்களும், கொடுமைகளும் செய்து கொண்டிருந்த ஆங்கிலேயே அரசை எதிர்த்து மார்க்கப்போர் புரிய இந்திய உலமாக்கள் பத்வா வெளியிட்டு களத்திலும் இறங்கி செயல்பட்டுக் கொண்டிருந்த நேரத்தில் (அதற்காக மௌலானா பஜ்லுல் ஹக் ஹைதராபாதி ரஹ்மத்துல்லாஹ் அலைஹி போன்றோர் தம் இன்னுயிரை நீத்தனர்) ஆங்கிலேய அரசின் கைக்கூலிகளாக செயல்பட்டு வந்த இந்த ஸையித் அஹ்மத் பரேலவி, இஸ்மாயில்

தெஹ்லவி போன்றோர் அவர்களின் அனுசரணை, தயவிற்காக கடிதம் எழுதுகின்றனர் பாருங்கள். இந்த உதவியுடன் செய்யும் சண்டைகளை ‘ ஜிஹாத்’ என்று சொல்லி ஜிஹாத்திற்கு புதுவிளக்கம் அளிக்கின்றார்கள் இவர்கள்.

2. ‘ கல்கத்தாவில் மௌலவி இஸ்மாயில் (திஹ்லவி) ஜிஹாதைப் பற்றி பயான் செய்து கொண்டிருக்கும்போது, ஒருவர் எழுந்து நின்று, “ நீங்கள் ஏன் ஆங்கிலேயர்களை எதிர்த்து ஜிஹாத் செய்ய பத்வா கொடுப்பதில்லை” என்று கேட்டார். அதற்கு மௌலவி இஸ்மாயில்....‘
“ ஆங்கிலேயர்களுடன் ஜிஹாத் செய்வதென்பது எவ்வகையிலும் வாஜிபில்லை.....அவர்கள் மீது எவரேனும் தாக்குதல் நடத்தினால் அப்படித் தாக்குவோரை எதிர்த்துப் போரிட வேண்டியது முஸ்லீம்களது கடமையாகும்...”
நூல் : ஹயாத்துத் தைய்யிபா, பக்கம் 296

இவர்களின் இந்த ஆங்கிலேய பாசம்தான் இவர்களை இஸ்லாமிய மார்க்கத்திற்கு எதிராக செயல்படத் தூண்டிற்று.

இந்தக் கொள்கைகளை இஸ்லாமிய மக்கள் மத்தியில் பரப்பி ஒன்றுபட்டு போராடும் முஸ்லிம்களை சிதறச் செய்து பலவீனப்படுத்தி ஆங்கிலேயர்களுக்கு எதிராக கொடுக்கப்பட்ட ஜிஹாத் பத்வாவை பலமிக்கச் செய்வதுதான் இவர்களின் நோக்கமாக இருந்தது.

இதற்காக இவர்கள் ஊர்ஊர்ராக சென்றனர். அதற்கு ஆங்கிலேயே அரசும் உதவிக்கரம் பலவகையிலும் செய்து கொண்டே வந்தது.

**ஆங்கிலேயர் தேவ்பந்திகளுக்கு செய்த பொருள்உதவி**

ஸையத் அஹ்மத் பரேலவிக்கு ஆங்கிலேயர் செய்த உதவி பற்றி அபுல்ஹஸன் அலி நத்வியால் எழுதப்பட்ட ‘ ஸீரத்தே ஸையத் அஹ்மத் எனும் நூலின் முதல் பாகம் பக்கம் 190ல் கூறப்பட்டுள்ளது.



“ இதற்குள் குதிரை மீது சவாரி செய்த ஒரு ஆங்கிலேயன் சில பல்லக்குகளில் உணவுப் பொருட்களைச் சுமந்து கொண்டு (எங்கள்) படகிற்கருகில் வருவதைப் பார்த்தோம். அருகில் வந்த ஆங்கிலேயன்.....பாதிரிசாஹிப் எங்கேயிருக்கிறார்? என்று வினவினான். உடனே ஹஜ்ரத் அவர்கள் படகிலிருந்து நான் “இங்கே இருக்கிறேன்” என்று பதில் தந்தார்.

“......தங்களுக்காக சூரியன் மறையும் வரை உணவு தயாரிப்பதில் மும்முரமாயிருந்தேன்.” இது கேட்ட ஸையத் சாஹிப் (பரேலவி) அவர்கள், கொண்டுவரப்பட்ட உணவுப் பொருட்களை தமது பாத்திரங்களுக்கு மாற்றுமாறு ஆணையிட, உணவு பெற்றுக் கொள்ளப்பட்டு கூட்டத்தினர்களுக்கு விநியோகிக்கப்பட்டது....

**ஆங்கிலேயர் தேவ்பந்திகளுக்கு செய்த பணஉதவி**

ஸையத் சாஹிப்(பரேலவீ) ஜிஹாதில் மும்முரமாய் ஈடுபட்டிருந்த நேரம் அப்போது டில்லியைச் சார்ந்த தனவந்தர்கள் மூலமாக முஹம்மது இஸ்ஹாக் என்பவரிடமிருந்து சையத் சாஹிபுடைய பெயருக்கு ஏழாயிரம் ரூபாய்க்கான ஒரு உண்டி (ஒருவகை செக் போன்றது) அனுப்பப்பட்டது...
நூல்: தாரீகே அஜீபாஹ், பக்கம் 89

இவ்வாறு பல்வேறு வழிகளில் பணமும், உணவும் இஸ்லாத்தைக் கூறுபோடும் பணியை செய்வதற்காக ஸையத் அஹ்மத் பரேலவிக்கு கிடைத்துக் கொண்டிருந்தது. மேலும் ஆங்கிலேய அரசின் ஆதரவும் இருந்தது.இந்த தைரியத்தில்தான் சையத் சாஹிப் சில காரியங்களைச் செய்தார். அவர் செய்த இஸ்லாத்திற்கு மாற்றமான காரியங்களை பார்ப்போம்.

இவர்களில் அஷ்ரப் அலி தானவி ஆங்கிலேய அரசாங்கத்திடமிருந்து மாதந்தோறும் அறுநூறு ரூபாய் கைக் கூலி பெற்றுள்ளனர். (ஆதாரம் மகாலிமத்துஸ் ஸத்ரைன் பக்கம் 10,11)

அஷ்ரப் அலி தானவியின் பரிந்துரையின் பேரில் அவர் சகோதரர் மஜ்ஹர் அலி பிரிட்டீஷ் உளவு ஸ்தாபனத்தில் சி.ஐ.டி யாக பணியாற்றினார். (ஆதாரம் மக்தூபாத்தே ஷஹீது பக்கம் 297 -299)

மௌலவி இல்யாஸ் 14.03.1938ல் அரேபியா சென்று வஹ்ஹாபிக் கொள்கையை தந்திரமாக பரப்புவதற்கு, தான் வகுத்துள்ள திட்டங்களை சவூதியிடம் விளக்கி ஆதரவு கேட்டுப் பெற்றார். அதைப் போன்று அவருடைய சகலர் மௌலவி இஹ்தியாமுல் ஹஸன் நஜிது சென்று, அன்று தலைமை நீதிபதியாக இருந்த அப்துல் வஹ்ஹாப் நஜிதினுடைய பேரப்பிள்ளையை சந்தித்து தான் வந்த நோக்கங்களையும், திட்டங்களையும் விளக்கி உதவி கோரினார். அவரும் எல்லா உதவிகளையும் செய்வதாக வாக்களித்தார். வெள்ளையர்களுடன் சவூதி வஹ்ஹாபிகளுடன் தொடர்பு கொண்டதற்கு ஆதாரம் உள்ள நூல்கள் சில:

1. கூன் கே ஆன்ஸூ (ரத்தக்கண்ணீர்)
2. ஹயாத்துத் தைய்யிபா பக்கம் 296, 302
3. ஷீரத்தே ஸையத் அஹ்மத், முதல் பாகம்- பக்கம் 190
4. தத்கிரத்துர் ரஷீத், இரண்டாம் பாகம் -பக்கம் 270

இதிலிருந்து யூத சியோனிச ஆங்கில ஏஜெண்டுகளாக சவூதி ஆட்சியாளர்களையும் அவர்களது ஏஜெண்டுகளான மௌலவி. இல்யாஸ், மௌலவி இஹ்தியாமுல்ஹசன் ஆகியோர்கள் யார் என்பதை வாசகர்கள் புரிந்திருப்பீர்கள். மேலும் ஒரு திக்கிடும் சம்பவத்தை **பயாமே மில்லத்** என்ற ஏட்டில் 15.02.1968ல் வெளிவந்ததை கவனிக்கவும். பீகார் மாநிலம், பிந்தியா மாவட்டத்தில் பாரதிய ஜனதா, இந்து மகாசபை மனப்பான்மை கொண்ட முஸ்லீம் அல்லாதாரின் ஒத்துழைப்போடு ஏற்பாடு செய்யப்பட்ட தப்லீக் இஸ்திமா நடந்து கொண்டிருந்த போது இரண்டு மைல்களுக்கு அப்பால் சாரமண்ட் என்ற நகரில் இஜ்திமாவில் கலந்து கொள்ளாத முஸ்லீம்கள் கலவரத்தால் இரத்த வெள்ளத்தில் மிதந்து



கொண்டிருந்தனர் என்பதை நினைக்கும்போது வஹ்ஹாபிக் கொள்கையின் மூலவர் அப்துல் வஹ்ஹாப் நஜதி, ஆங்கிலேயரின் துணை கொண்டு இதைப்போன்று சுன்னத்வல் ஜமாத் மக்கள் மீது நடத்திய கொலை வெறியாட்டங்கள் நினைவுக்கு வருகின்றன.

மேலும் இலங்கையில் கல்முனையில் 1991ம் ஆண்டு ஆகஸ்டில் சுன்னத்வல்ஜமாத் மாநாடு நடந்து கொண்டு இருந்தபோது, வஹ்ஹாபிகள் விடுதலைப் புலி ஆட்களை வைத்து மாநாட்டை தாக்கும்படி ஏவி விட்டனர். ஆனால் உரிய நேரத்தில் அந்த நபர்கள் பிடிக்கப்பட்டு தாக்குவது தடுக்கப்பட்டது. பிடிக்கப்பட்டவர்கள் இத் தகவலை தந்துள்ளனர்.

மேலே நாம் விவரித்த அத்துணை சம்பவங்களையும், சான்றுகளையும் ஒருங்கிணைந்து மனக்கண் முன்னிருத்தி பார்க்கும்போது, வஹ்ஹாபிகள் சியொனிச் ஆங்கில ஏஜெண்டுகளாக இருந்துகொண்டு இஸ்லாத்தில் குழப்பத்தை ஏற்படுத்துவதோடு, வஹ்ஹாபி அல்லாத முஸ்லீம்களையும் காட்டிக் கொடுக்கும் கயவர்கள்! துரோகிகள்! என்பது நன்கு புரிகிறது அல்லவா! இல்லாவிட்டால் பாபர் மசூதியை இடித்த சங் பரிவாளர்களுக்கு துணை நின்ற தலைவர்களுக்கு தப்லீக் உலமாக்கள் தலைப்பாகை கட்டி கௌரவித்திருப்பார்களா? அதை தொலைக்காட்சியும், ஏடுகளும் பகிரங்கப்படுத்தின. பாபர் மசூதி இடிப்பட்டது எந்த இஸ்திமாவிலும் தப்லீக்கினர் கண்டித்து பேசியதுண்டா?

லிபிய்யாவிற்குச் சென்ற தப்லீக் ஜமாத்தினரை சந்தேகித்து அங்குள்ள உலமாக்கள் மூலமாக இவர்களின் கொள்கைகள், நோக்கங்கள், திட்டங்களை அலசி ஆராய்ந்த பின் இவர்களை சி.ஐ.ஏ. ஏஜெண்டுகள் என்றும் (அமெரிக்க உளவு ஸ்தாபனம்) ஷைத்தானியத்தான ஒரு கூட்டமென்றும் லிபியாவின் அதிபர் கர்னல் முஹம்மது கத்தாபி பிரகடனப்படுத்தி தப்லீக் ஜமாத்தினர் லிபியாவில் நுழையாமல் தடை செய்ததை கராச்சியிலிருந்து அக்டோபர் 6, 1989-ல் வெளிவந்த அஹ்வால் என்று உருது வார இதழ் இனங்காட்டியுள்ளது.

பல நாடுகளிலும் தப்லீக் இயக்கத்திற்கு எதிர்ப்பு வலுத்து வருகிறது. இலங்கையில் தேவ்பந்து தப்லீக் ஜமாதுக்கு தடை விதிக்கப்பட்டுள்ளது. மலேசியா, புருணே சிங்கப்பூர் இன்னும் கிழக்கத்திய நாடுகளில் தப்லீக் ஜமாத் தடைசெய்யப்பட்டுள்ளது அதிகாரப்பூர்வமாக.

## 11.தேவ்பந்திகளின் தரீக்கா வேஷம்

" நாங்கள் இமாம்களை பின்பற்றுகிறோம்," "நாங்களும் ; சுன்னத் ஜமாத்துதான்" எனக்கூறும் ஆபத்தான வழிகேடர்களான தப்லீக் ஜமாத்தினர்கள் தான் வஹ்ஹாபி கொள்கைகளை மறைத்து தொழுகைக்கு அழைக்கின்றோம் என்ற போர்வையில் வஹ்ஹாபி விஷத்தை தூவும் இந்த கேடுகெட்டவர்கள் தாம் வழிகேடர்களில் மிகவும் ஆபத்தானவர்கள்.

" தொழுகைக்குதான் அழைக்கின்றோம்" என்ற பசப்பு வார்த்தையின்மூலம் மக்களை வழி கெடுத்தது போதாது என்று புனிதமான தரீக்காவின் பெயர்களை கூறி தன்னை ஷைகு என போலி வேடம் தரித்து தற்காலத்தில் வஹ்ஹாபிய கொள்கைகள் தரீக்காவின் வேடம் பூண்டு தமிழகத்தில் நுழைந்துள்ளார்கள்.

வஹ்ஹாபிய விஷம் எந்த பெயரில் வந்தாலும் அதன் உண்மையை கண்டறிந்து மக்களுக்கு அதிலும் குறிப்பாக தமிழக முஸ்லீம்களை 17.02.1995 **அன்று மஜ்லிஸ் உலமாயி அஹ்லெ சுன்னத் வல்ஜமாத் (தமிழ்நாடு) தீர்மானம் இப்படி மக்களை எச்சரிக்கின்றது.**

**" தரீக்கா " எனும் போர்வையில் தப்லீக்ஜமா அத்தினர் செய்யும் துரோக செயல்களை தடுப்பதென்றும், இந்த சூழ்ச்சியிலிருந்து உம்மத்தே முஹம்மதியாவை காப்பதென்றும், " காபிர் " என தீர்ப்பளிக்கப்பட்ட மௌலவி அஷ்ரப் அலி தானவி, ரஷீத் அஹ்மத் கங்கோஹி போன்ற வஹ்ஹாபிகளை ரஹ்மத்துல்லாஹி அலைஹி எனக் கூறி தன்னை ஷெய்குமார்களாக சொல்லிக்கொண்டு தரீக்காவை உடையவர்கள் போல் திரியும் மௌலவி MJ. முஹம்மது கமாலுதீன்**



**பாகவி (ஆரணி) அவர்களையும் அவரது கலீபாக்களையும் வழிகேடர்கள்! என்று இக்கூட்டம் தீர்மானிக்கிறது. மேலும் இத்தகைய ஷைகுமார்களிடம் பெறப்பட்ட பைஅத் செல்லாது என்றும் பைஅத் வாங்கியவர்கள், தமது முரண்பட்ட ஷைகுமார்களை விட்டும் உடனடியாக விலக வேண்டுமென்றும் இச்சபை கேட்டுக் கொள்கிறது. "**

ஆரணிபாபா என்று அழைக்கப்பட்ட MJ. முஹம்மது கமாலுதீன் பாகவி என்பவர் தன்னை வெளிப்படையாகவே **சிஷ்திய்யா ரஷீதிய்யா** எனும் தரீக்காவின் ஷெய்கு என்று கூறினார். அதாவது, ரசூல்லாஹ்வை தனது தரம் தாழ்த்த அறிவால் தகாத வார்த்தைகளால் ஏசிய ரஷீத் அஹ்மத் கங்கோஹி என்பவர் தேவ்பந்தை சார்ந்த வஹ்ஹாபிய வழிகேடர். இவர் இவரது குருவான ஷெய்கு காமில் அல்லாமா முஹாஜிர் மக்கி ரஹிமஹுல்லாஹ் அவர்களின் **"ஹப்து மஸ்அலா"** என்ற நூலை பகிரங்கமாக " எனது ஷெய்கு குப்ரு செய்து விட்டார் " எனகூறி நடு ரோட்டில் வைத்து எரித்ததால் இந்த ரஷீத் அஹ்மத் என்பவருக்கும் -ஹாஜி முஹாஜிர் மக்கிரஹிமஹுல்லாஹ் என்பவருக்கும் இடையே இருந்த நிஸ்பத் எனும் தொடர்பு துண்டிக்கப்பட்டுவிட்டது. (தேவ்பந்த்தின் 200வருட இறைநேசசெல்வர்கள். (பக்கம் - 168)
(உலகிலேயே தனது ஷைகின் பேரில் குப்ரு பத்வா கொடுத்தவர் இவராகத்தான் இருப்பார் போலும்).

இந்த சம்பவத்திற்கு பின்னால் இந்த ரஷீத் அஹ்மத் எனும் வழிகேடர் தன்னை சிஷ்திய்யா ரஷீதிய்யா எனும் பெயரில் ஓர் தரீக்காவை ஏற்படுத்தி மக்களை வழி கெடுத்தார். இந்த போலியான ரஷீதிய்யா எனும் வழிகெட்ட தரீக்காவின் ஷைகாக தமிழகத்தில் விளங்கியவர்தான். இந்த MJ. முஹம்மது கமாலுதீன் என்பவர். இந்த தரீக்கா போலி என்பதற்கான ஆதாரங்கள்.

1. ஹாஜிமுஹாஜிர் மக்கி அவர்களுடன் இந்த தரீக்கா சில்சிலா தொடர் அறுபட்டுவிட்டது.
2. ரஷீத் அஹ்மத் என்பவர் வழிகெட்ட வஹ்ஹாபியாக இருந்தார். ரசூலுல்லாஹ்வை தரக்குறைவாக தனது நூலான **பதாவா ரஷீதிய்யா,** எனும் நூலில் எழுதியதன்காரணமாக உலக மார்க்க அறிஞர்

பெருமக்களால் காபிர் என தீர்ப்பளிக்கப்பட்டவராவார். இப்படிப்பட்ட வஹ்ஹாபியை எப்படி? ஒரு தரீக்காவின் ஷெய்காக ஒப்புக்கொள்ளமுடியும். ஆகவே இந்த **சிஷ்திய்யா ரஷீதிய்யா** எனும் தரீக்காவின் கீழ் செயல்படும் பேரணாம்பட் அப்துல்பஷீர், அவரது கலீபா ஆரணி கமாலுத்தீன் பாகவி மற்றும் அவரது கலீபாக்கள் என அனைவருமே தவறான ஓர் தரீக்காவில் மக்களை வழிகெடுக்க முனைந்ததாலேயே தமிழ்நாடு மஜ்லிஸ் உலமா சபை மேற்கண்ட தீர்மானம் நிறைவேற்றி மக்களை எச்சரித்தது.

இன்னும் இதே உலமா சபை 8.08.2006ல் நிறைவேற்றிய தீர்மானத்தின் சாரமிது.

டில்லி ஹஜ்ரத் நிஜாமுத்தீன் அவுலியா பாரம்பரியத்தை சார்ந்த **காஜா ஹஸன் நிஜாமி** அவர்கள் எழுதியதாக, **இஃப்திராகே பைனல் முஸ்லிமீன்கே அஸ்பாப்** எனும் நூலில் **“ வஹ்ஹாபிகள் கூட தரீக்காவில் புகுந்து முரீது கொடுக்கிறார்கள். அவர்கள் தான் தேவ்பந்திகள்”** என்கிறார்கள்.

நூரிஷாஹ் என்பவரும் அவரை சார்ந்து தங்களை கலீபாக்கள் என கூறிக்கொள்வோரும் அந்தரங்கமாகவும், சில வேளைகளில் வெளிப்படையாகவும் தேவ்பந்திய தப்லீக் வஹ்ஹாபிய தலைவர்களான அஷ்ரப் அலி தானவி, ரஷீத் அஹ்மத் கங்கோஹி போன்றவர்களை ஆதரிக்கின்றார்கள்.

ஹகீகதே கிதாபவி வக்புல் இக்லாஸ் இஸ்தான்புல் துருக்கி நாட்டை சேர்ந்த **ஹஜ்ரத் ஹுஸைன் ஹில்மி** என்பவர் **“ நூரிஷாஹ் தரீகா வழிகெட்டது”** என்ற நூலை வெளியிட்டுள்ளார்.

சமஸ்த கேரளா உலமா சபை 30.7.1996 அன்று சுன்னத் ஜமாத் கொள்கைகளுக்கு மாற்றமான நூரிஷாஹ் தரீக்காவை விட்டு பொதுமக்கள் ஒதுங்கி இருக்குமாறு வேண்டுகோள் விடுத்துள்ளது.

**“ அஸ்ராரே கலிமதுத்தய்யிபா ”** என்ற நூலில் நூரிஷா, அஷ்ரப் அலி தானவியை புகழ்ந்து தள்ளுகிறார்.



இவையெல்லாவற்றையும்விட நூரிஷாஹ், ஜாமியா இலாஹியாத் என்ற மதரஸாவை ஹைதராபாத்தில் துவங்கிய போது தேவ்பந்து ஸ்தாபகரின் பேரரான மௌலானா காரி தைய்யிப் சாஹிப் தேவ்பந்தியை வைத்தே திறப்பு விழா நடத்தினார் என்றால் நூரிஷாஹ் தரீக்கா எதை சார்ந்தது என்பது தெளிவாகிறது.

பைஜிஷாஹ் 19 ஆண்டுகள் தப்லீகில் சுற்றியதும், தேவ்பந்திகளை மிகப் புகழ்ந்தும் “ நூருன் நூர்” என்ற நூலில் 11 வது பக்கத்தில் எழுதியிருப்பதும் வஹ்ஹாபிய அடையாளங்களின் எச்சங்களே!

ஆகவே இந்த ஆதாரங்களால் நூரிஷாஹ்விடம் பெற்ற பைஅத்தும்-கிலாபத்தும் செல்லாது என மஜ்லிசு உலமாயி அஹ்லெ சுன்னத்வல்ஜமாத் தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.

– நன்றி தர்கா இதழ். ஜுலை 2009

## 12. தேவ்பந்தும் தீவிரவாதமும்

### தேவ்பந்தியும், பரேல்வியும் சுதேசி ஜிஹாத்

**13.8.2008 இந்தியா டுடேயில் வெளிவந்த கட்டுரை உங்கள் பார்வைக்கு.....**

2002ல் குஜராத் கலவரத்தை தொடர்ந்து குஜராத்தில் இருக்கும் தப்லீக் ஜமாத் மற்றும் அஹ்லெஹதீஸ் குழுக்களிலுள்ள தீவிரமதவாத சக்திகள் பழிவாங்கப் போவதாகசபதமிட்டன. தெற்கு குஜராத்தில் தேவ்பந்தி மத்ரஸாக்களில் படிக்கும் 24 மாணவர்கள் பெரும்பாலானவர்கள் காஷ்மீரிகள். கலவரத்திற்குப் பின் ஆயுதம் மற்றும் வெடிமருந்து பயிற்சிகள் பெறுவதற்காக பாகிஸ்தான் போனவர்கள். இவர்களில் 12 பேர்பரூர் அருகே கந்தாரியாவில் இருக்கும் தாருல் உலூம் இஸ்லாமியா என்ப்படும் தேவ்பந்த் மத்ரஸாவை சேர்ந்தவர்கள்.

குஜராத்தில் கோத்ரா கலவாரத்திற்குப் பின் நடந்த அக்ர்தம் தாக்குதல் மற்றும் 2002ல் 13 பேர் காயமடைந்த பஸ் குண்டு வெடிப்பு

உட்பட பயங்கரவாத செயல் சம்பந்தமாக கைது செய்யப்பட்டவர்களில் பெரும்பான்மையினர் தேவ்பந்திகள்தான்.

பதினைத்து வயதினருக்கும் போது உஜ்ஜைன் பாலிடெக்னிக்கில் படித்துக் கொண்டிருந்த சஃப்தர் நகோரிக்கு ஹபீஸ் நிஃமதுல்லாஹ் நத்வியின் தொடர்பு கிடைத்தது. (இது தேவ்பந்து மதர்ஸாவின் முதன்மைக் கிளை இதுவும் ஏமாற்றுப் பித்தலாட்டத்தின் மூலம் துவங்கப்பட்டது.) நத்வி அப்போது உஜ்ஜைன்ஃபதே மசூதியின் இமாமாகவும் ஜமாத்தே இஸ்லாமி ஹிந்தின் தலைவராகவும் இருந்தார். மத்திய பிரதேச போலீஸ் அதிகாரியின் இளைய மகனான நகோரிக்கும் நத்வி தனிப்பட்ட முறையில் நிறைய அறிவுரைகள் தந்தார். விரைவிலேயே மதவாத அமைப்பான இந்திய இஸ்லாமிய மாணவர்கள் இயக்கத்தில் (சிமி) நகோரி சேர்த்துக் கொள்ளப்பட்டார். நகோரி மெக்கானிக்கல் எஞ்சினியரிங்கில் டிப்ளமாகவும் இதழியல் மற்றும் தகவல் தொடர்பியலில் முதுநிலை பட்டமும் பெற்றதோடு தாலிபான்களின் ஜிஹாத் சித்தாந்தங்களுக்காக அர்ப்பணிக்கப்பட்ட அதிதீவிர சிமியின் தலைவராகவும் ஆனார். கடந்த மார்ச் மாதம் நகோரி 38, இந்தூரில் கைது செய்யப்பட்டார்.

நகோரி நடத்திய அமைப்பு டாக்டர்கள், எஞ்சினியர்கள், வெப்சைனர்களாக இருக்கும்இளைஞர்களை மூளை சலவை செய்து அவர்களுக்கு திட்டமிட்டு படுகொலைகள் செய்யவும், குண்டுகள் வைப்பதற்கும் பயிற்சி அளித்தது. அந்த இளைஞர்கள் சதித் திட்டங்களை செயல்படுத்துவதற்கு முன்பே பிடிபட்டு விட்டார்கள். இவர்கள் அனைவரும் கடுமையான மதக் கேட்பாடுகளை பின்பற்றும் தேவ்பந்தி பிரிவின் தீவிர போக்கை கொண்ட வஹாபி சித்தார்த்தத்தை பின்பற்றுபவர்கள். இது இஸ்லாமின் மிக ஆச்சாரமான பிரிவு இப்பிரிவினர் இஸ்லாமின் இன்னொரு பிரிவான சூஃபிஸத்தின் செயல்பாடுகள் இஸ்லாத்தின் தூய்மையை கெடுப்பவை என்று கருதுவதோடு முகமது நபியை மதிக்கப்பட வேண்டிய இறை தூதராக பார்க்கலாமே தவிர அவரை வழிபடலாகாது என்று நம்புவர்கள்.



**தேவ்பந்திகளும் அவர்களது சேவை பிரிவான தப்லிக் ஜமாத்தும்** (நீண்ட வெள்ளை ஜிப்பா, தலைப்பாகை மற்றும் நிண்ட தாடியும் தரிப்பது இவர்களது வழக்கம்) தேச, பிராந்தியம் போன்றவற்றை தாண்டிய உலகளாவிய இஸ்லாமிய அடையாளத்திற்கு அழைப்பு விடுத்து வருகின்றனர்.

இவர்களிடமிருந்து மிகவும் வித்தியாசப்படுவர்கள் பரேல்வி (சுன்னத் ஜமாத்) பிரிவினர். இந்தியாவில் 15 கோடி முஸ்லிம்களில் மூன்றில் இரு பங்கினர் இந்தப் பின்பற்றுவர்களே, பரேல்வி (சுன்னத் ஜமாத்) பிரிவினர் வளமான உள்ளூர் கலச்சாரத்துடன் தொடர்பு, நபிகளை வழிபடுவதோடு சூஃபிகளின் வழக்கமான தர்காவுக்கு செல்வது இசையை ரசிப்பது போன்றவற்றையும் பின்பற்றுபவர்கள். இவர்களது போரட்டம் இவர்களது தொடக்கம் போலவே மிகவும் பழமையானது. இந்த இரு பிரிவுகளுமே 19வது நூற்றாண்டின் இன்றைய உ.பி, பகுதியில் உள்ள தேவ்பந்த் மற்றும் பரேவி ஆகிய இடங்களில் உதித்தவை. தேவ்பந்தி தப்லீக் ஜமாத் மற்றும் அஹ்லெ ஹதீன் இடையிலான வேறுபாடும் பரேல்வி நம்பிக்கைக்கு இடையேயான வேறுபாடும் மிக ஆழமானவை என்பது தான் சுவராசியமான விஷயம். சில சமயம் கைகலப்பு நடக்குமளவுக்கு வேறுபாடுகள் ஆழமானவை. பரேல்விகள் தனியாக ரிஃபாய் கமிட்டி என்ற ஒன்றை வைத்துள்ளனர். தேவ்பந்திகளின் தீவிர இஸ்லாமிய மதவாத பிரச்சாரங்களை எதிர்ப்பது தான் இக்கமிட்டியின் ஒரேவேலை.

இந்தியா மீது இழைக்கப்படுவது இஸ்லாமிய பயங்கரவாதம் அல்ல. அது வஹாபி பயங்கரவாதம் என்கிறார் (இந்திய முஸ்லிம் சங்கம் – நூரி) என்ற மிதவாத இஸ்லாமிய அமைப்பை நடத்தும் அரசு ஊழியரான முகமது ஹமீது. ஜெய்ஷெ முகமது, ஹுஜி, லஷ்கரெ தைபா, ஹர்கதுல்அன்ஸார் போன்ற பெரும்பான்மையான பயங்கரவாத குழுக்கள் இந்தியாவில் வஹாபிஸத்தின் 3 துணை குழுக்களை ஆதரிக்கின்றன.

கிட்டதட்ட அனைத்து பயங்கரவாதிகளும் எப்படி வஹாபிகளை பின்பற்றுபவர்களாக இருக்கிறார்கள் என்பதை அவர்கள் தான் விளக்க வேண்டும் என்கிறர் பரூச்சில் இருக்கும் போதகரான அப்துல்லா படேல். பாகிஸ்தானிலுள்ள வஹாபிகள் மிதவாதிகள் மீது போர் பிரகடனம் செய்திருக்கிறார்கள், அந்தப்போர் இதைவிட சற்று ஆபத்தானது. 2006 ஏப்ரல் 11ம் தேதி கராச்சியில் நடந்த மதக்கூட்டம் ஒன்றில் குண்டு வெடித்ததில், பாகிஸ்தானின் தேவ்பந்திகளை எதிர்க்கும் சன்னி அமைப்பான சன்னி தஹ்ரீக்கின் மூத்த தலைவர்கள் அனைவரும் பலியானர்கள். இவர்களுடன் தஹ்ரீகின் கீழ்பட்ட தலைவர்கள் உட்பட 50 அப்பாவி சிவிலியன்களும் கொல்லப்பட்டார்கள். இந்தியாவிலுள்ள பரேல்விகள் பயங்கரவாத தாக்குதல்களுக்கு உள்ளாகி உள்ளனர். பரேல்விகள் அதிகம் செல்லும் அஜ்மீர்தர்காவில் கடந்த வருடம் நடந்த குண்டு வெடிப்பில் மூன்று பேர் கொல்லப்பட்டனர்.

பெரும்பான்மையான பயங்கரவாதிகள் தேவ்பந்தி – தப்லீக் அல்லது அஹ்லெஹதிஸை பின்பற்றுபவர்களாக இருக்கிறார்கள். பயங்கரவாத அமைப்புகள் இந்தக் ,குழுக்களிமிருந்து தான் தங்களுக்கு வேண்டிய ஆட்களை தேர்ந்தெடுப்பது போல தெரிகிறது. என்கிறர் அகமதாபாத் குற்றப் பிரிவின் முன்னல் ஏ.சி.பியான ஜி.எல்.சிங்கல். அனைத்து சமூகங்களில் இருந்தும் வெளியே வந்து உலகளாவிய முஸ்லிம் சமூகத்தை மறு உருவாக்கல் செய்யும் கனவுள்ளவர்கள் இருக்கிறர்கள். இவர்களை கையாள்வதில் உள்ள சவால்களில் இருந்துதான் நாட்டின் பாதுகாப்புக்கு அச்சுறுத்தல்கள் முளைக்கின்றன.

இந்த இரண்டாம் தலைமுறை – அனைவரும் அல்ல, சிலர் மட்டுமே – தங்களது தாத்தாக்களின் தூய்மையான கலாச்சாரத்திலிருந்து அந்நியப்பட்டு இருப்பதாக உணர்கிறர்கள். மேற்கத்திய கலாச்சாரத்திலிருந்தும் தங்களை மிகவும் அந்நியமாக உணர்கின்றர்கள். இவற்றேடு கலந்து விடாமல் எந்த சமூகத்தையும் கண்டு கொள்ளாதீர்கள். அரசியல் பற்றி கண்டு கொள்ளாதீர்கள். ஒரு நல்ல முஸ்லிமாக மட்டும் இருக்க முயலுங்கள். உண்மையான முஸ்லிம் சமூகத்தை உருவாக்க முயலுங்கள் என்று சொல்லும் புதிய



மதவாத இயக்கத்தில் சேர்வது அவர்களுக்கு பிடித்திருக்கிறது. இதுதான் என் அடையாளம் என்று அவர்கள் சொல்கிறர்கள். என்கிறர் திஃபெயிலியர் ஆப் பொலிடிக்கல் இஸ்லாம் என்ற நூலை எழுதிய ஆலிவர்ராய். இந்த புதிய அடையாளத்தை வலுப்படுத்தத்தான் தங்கள் சமூகத்திற்கு எதிரான அநீதிகளை அவர்கள் முன் உதாரணமாக வைக்கிறார்கள். சமீப வருடங்களில் பாபர் மசூதி இடிப்பு, 2003 மும்பை கலவரம், 2002 குஜராத் கலவராம் ஆகியவை இவர்களது சக்தி வாய்ந்த பிரச்சார ஆயுதங்களாகி விட்டன.

மேலெழுந்த வாரியாக பார்த்தால் பிரச்சனை இல்லை என்று தோன்றும், முஸ்லீம் சமூகத்தில் 80 சதவிதத்தினர் வஹாபிகள் அல்லாதவர்கள் தான். இவர்களுக்கு பெரிய ஆபத்தில்லை என்றே தோன்றுகிறது. ஆனால் அவர்களது மிதவாதக் குரல் மூழ்கடிக்கப்படும் ஆபத்து இருக்கிறது. ஒரு குறிப்பிட்ட வகையான இஸ்லாத்துக்காக வஹாபிகள் அதி தீவிரமான பிரச்சாரத்தை நடத்திக் கொண்டிருக்க, பிற பிரிவுகள் நிரந்தரமாக இவற்றை எதிர்க்க வேண்டிய நிலையில் இருக்கின்றன. ஜிஹாத் சித்தாந்தத்திற்கு வன்முறை சார்ந்த அர்த்தம் கற்பிக்கப்படுகிறது. இதற்கு ஆட்களை உருவாக்கவும் திரட்டவும் இந்தியாவில் தீவிரவாத இயக்கத்தின் தளத்தை தேர்வு செய்யவும் ஏராளமான வலு இருக்கிறது. என்கிறார் இன்ஸ்டிடியூட்ஃபார் காஸ்ஃப்ளிக் மேனேஜ்மென்டின் நிர்வாக இயக்குனரான அஜய்சஹானி.

வஹாபி சிந்தாந்தத்தை பரப்புவதற்கு எட்டு ஆண்டுகளுக்கு முன்பு 28 இணைய தளங்கள் இருந்தன. இன்று 1000 என்கிறார் இந்தியாவில் இஸ்லாமிய சித்தாத்தம் பற்றி ஆய்வு செய்பவரும் மும்பை ரஸ்வி கல்லூரியில் பேராசிரியராக இருப்பவருமான ஷாகீப் ரஸ்வி.

நிதி இல்லாமல் பரேல்வி மசூதிகள் தடுமாறுகையில் சவூதி பணத்தில் உருவாகும் தப்லீக் மசூதிகள் ஹரியானாவில் இருந்து கேரளா வரை, தெற்கு குஜராத்திலிருந்து மேற்கு வங்கம் வரை நாடு முழுவதும்

தோன்றி பளிச்சிடுகின்றன. பெரும்பான்மையான பரேல்வி சன்னி மசூதிகள் மோசமான நிலையில் இருக்கின்றன. அதனால் தீவிர போக்கு கொண்டவர்கள், அதை பழுது பார்க்க நன்கொடைகள் கொடுத்து தங்கள் மத குருக்களை நியமனம் செய்து படிப்படியாக அதை தங்கள் வசம் எடுத்துக் கொள்கிறார்கள் என்கிறார் ரஸ்வி, கடந்த பத்தாண்டுகளில் 30 சதவீத மசூதிகள் வஹாபி சிந்தாந்த முன்னனி அமைப்புகளால் எடுத்துக் கொள்ளப்பட்டு விட்ன. ஆனால் தப்லீகிகள், ஜமாஅத்தே இஸ்லாமி, அஹ்லெ ஹதீஸ் பிரிவினரும் அவர்களது போதகர்களும் உள்ளே வரக்கூடாது என எச்சரிக்கும் அறிவிப்புப் பலகையை பரேல்வி மசூதிகள் வைத்திருக்கின்றன.

தங்களது சிந்தாந்தம் முஸ்லிம் இளைஞர்களிடம் மதவெறியை பரப்புதாக சொல்லப்படுவதை தேவ்பந்தி தப்லீகின் போதகர்கள் மறுக்கிறார்கள். ஒரு சிலரது வன்முறை நடத்தைக்கு ஒரு சிந்தாந்தமோ அல்லது மத போதனை கூடமோ எப்படி பொறுப்பாக முடியும் ? என்று கேட்கிறார் தப்லீக் போதகரான முகமது படேல். ஸவாத்யாயா பரிவார் அல்லது காயத்ரி பரிவார் போன்ற இயக்கத்துடன் தப்லீகை ஓப்பிடுகிறார். இந்துக்களை சரியான வழியில் கொண்டுவர அவர்கள் என்ன செய்கிறார்களே அதையேதான் நாங்கள் முஸ்லிம்களுக்கு செய்கிறோம். இதில் என்ன தவறு என்கிறார் அவர்.

குஜராத்தில் பாவ்நகர், ஜுனாகட், சூரத் தோஹத் ஆகிய இடங்களில் தேவ்பந்தி தப்லீக்கிகளுக்கும் மிதவாத பரேல்வி பிரிவை சேர்ந்த அஹ்லெ சுன்னத் போதகர்களுக்கும் இடையே கடந்த பத்தாண்டுகளாகவே மோதல்கள் நடந்து வருகின்றன. தெற்கு குஜராத்தில் பரூச்சில் படேல் முஸ்லிம்கள் நாற்பதாண்டுகளுக்கு முன்புவரை மிதவாதிகளாக இருந்து வந்தனர். ஆனால் தேவ்பந்தி போதகர்கள் இப்பகுதியில் தங்கள் நம்பிக்கைகளை பரப்பவே இன்று பெரும்பான்மையான முஸ்லிம்கள் வஹாபிகளாகி விட்டனர்.
- நன்றி இந்தியா டுடே 13.8.2008



## 13. தமிழகத்தில் தேவ்பந்திகளின் அட்டூழியம்

**வேலூர் ஆலா ஹஸ்ரத் அவர்களின் பிடரியைப் பிடித்த கொடுமை!**

வேலூர் பெரியமுப்தி ஆலிஜனாப் மௌலானா மௌலவி ஷேக் ஆதம் ஹஸ்ரத் (கிப்லா) அவர்கள் தென்னிந்தியாவில் பாகவி என்று குறிப்பிட்டுக் கொள்ளும் பல ஆயிரக்கணக்கான உலமாக்ககளின் உஸ்தாத் ஆவர்கள். நூறுவயதை எட்டிப் பிடித்துவிட்ட பெரியவரும் இஸ்லாமிய மார்க்க ஞானத்தில் இணையற்ற வல்லவருமாகிய ஆலா ஹஸ்ரத் அவர்கள் தமக்கு நேர்ந்த ஒரு துரதிஷ்டமான சம்பவத்தை மக்கள் தவறாக கருதிவிடாமிலிருக்க உண்மையை பகிரங்கப்படுத்தக் கேட்டுக் கொண்டதற்கிணங்க அவர்கள் அறிக்கையை இங்கு இடம் பெறச்செய்துள்ளோம். (மறுமலர்ச்சி வார இதழ் ஆசிரியர்)

1960 – ம் வரும் ஜனவரி 5–ம் தேதி சில தப்லிக் பிரச்சாரகர்ளால் மதரஸா பாக்கியாத்தில் மிகவும் பயங்கரமான ஓர் சம்பவம் நடந்ததை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். உரியகாலத்தில் இங்குள்ள உஸ்தாதுமார்கள் தலையிட்டு அதை தடுத்திராவிட்டால் அதன் விளைவு மிக கோரமாயிருத்திருக்கும்.

விஷயம், மௌலவி அபுஸ்ஸுஊது (பெங்களூர் ஷபிலுர் ரஷாத் அரபிகல்லூரியின் ஸ்தாபகர்), அகமது சாஹிப் அவர்கள் மௌலவி ரயீஹுல் இஸ்லாம் சாஹிப் அவர்களுக்கு ஒரு தப்லீக் ஜமா அத், மதரஸாவைப் பார்ப்பதற்கு வருவதாகவும் அவர்களுக்கு தாங்கள் அவ்விடமே இருந்து உபசரிக்க வேண்டும் என்றும் சொல்லி அனுப்பினர். பிறகு 11 – மணியளவில் ஒரு தப்லீக் ஜமாஅத்தோடு என்னிடத்தில் அவர் வந்தார். அப்போது எனதருகில் மௌலவி ஷெய்க் ஹசன் சாஹியும் இருந்தார். அந்த தப்லீக் கோஷ்டியில் அரபி நாட்டைச் சார்ந்த ஒருவரும் இருந்தார். அவர் பெரிய அல்லாமா வென்றும், தப்லீக் கமிட்டியின் முக்கியஸ்தர்களில் ஒருவர் என்றும், சமீபத்தில் நடந்த கூட்டத்தில் தீர்மானித்தபடி பல்வேறு பட்டணங்களுக்குச் அனுப்பப்பட்ட ஐந்து ஜமாத்துகளில் ஒரு ஜமாஅத்தின் தலைவரென்றும் மௌலவி

அபுஸ்ஸூவூத் அஹமது சாஹிப் என்னிடம் அறிமுகப்படுத்தி வைத்தார். பேச்சினூடே அந்த அரபி தன்னிடம் தப்லீக் சம்மந்தப்பட்ட விஷயத்தையும் கிளப்பினார். அதற்கு ஆதாரமாக குர்ஆன் ஆயத்து ஒன்றையும் தப்பும் தவறுமாக ஓதினார்.

தப்லிக் செய்வது முக்கிய, அவசர அவசியமான காரியமென்ற வாதத்தை முரட்டுத் தனமாக பேசி ஸ்தாபிக்க முயன்றார். அவர் வாதங்களை எல்லாம் கேட்டபிறகு அவர் ஓதிய ஆயத்தின் குறிக்கோளென்ன? அது எதற்காக இறக்கப்பட்டது என்ற மார்க்க நுணுக்கம்பற்றி அவரிடம் வினவியபோது பதில் கொடுக்க யாதுமறியாதவராய் மிகவும் தவறான வழியில் முறை தவறி நீ முட்டாள் கழுதை, குர் ஆன் ஹதீஸைப்பற்றி அறியாதவன். முகல்லித் (இமாமைப் பின்பற்றுபவர்) என்று பிதற்றி கூச்சலிட்டு ஆராவாரம் செய்தார். இச்சமயத்தில் மௌலவி அபுஸ்ஸூவூத் அஹ்மதுசாஹிப் அவர்கள் மௌலவி ஷெய்கு ஹசன் சாஹிப். அல்ஹாஜ் ஷாஹுல் ஹமீது சாஹிப் மற்றும் இதர கனவான்களும் இருந்தனர். அரபியனின் எந்த அளவு கோபம் உச்சநிலையை அடைந்துவிட்டதென்றல் என் கழுத்திலும் கையை வைத்துவிட்டார். அரபியின் கூச்சலைக்கேட்டு மாணவர்கள் கூடிவிட்டார்கள். மாணவர்களின் கோப உணர்ச்சியைக்கண்ட அரபி கலவரமடைந்து விரண்டோடி, மத்ரஸாவின் எதிரிலுள்ள ஆர்.கே. அப்துல் ஹக் சாஹிப் வீட்டில் புகுந்து கொண்டார். மௌலவி அபுஸ்ஸூவூத் அஹமது மத்ரஸா ஆபீஸ் ரூமில் புகுந்து ஒளிந்து கொண்டார்.

மாணவர்கள் கோபத்தால் மேற்கண்ட இரண்டு இடங்களையும் சூழ்ந்து கொண்டு, "அரபியனே வெளியே வா, தப்லீகை பற்றி ஹஜ்ரத்திடம் நேரியமுறையில் வாதிடு, இல்லாவிடில் மன்னிப்புகோரு" என்று ஒரு மணிநேரமாக கோஷமிட்டு வாதாடினர். இதற்கிடையில் அவ்வரபியை எப்படியும் அங்கு நின்று கொண்டிருந்த கார் மூலம் வீட்டை விட்டு வேற்றிடத்திற்கு அனுப்பிவிட ஆர்.கே. அப்துல்ஹக் முயற்சி செய்தார். இந்நிலையில் அங்கிருந்த சில உஸ்தாதமார்களும் மத்ரஸாவின் நிர்வாகஸ்தர்களின் சிலரான ஜனாப் ஆர். அப்துல் கப்பார்



சாஹிப், முஹம்மது இஸ்ஹாக் சாஹிப், படேல் அப்துல்ஸலாம் சாஹிப் இதர சில உள்ளூர்வாசிகளும் குறுக்கிட்டு நிலையை கட்டுக்கடங்க செய்திராவிட்டால் இதன் விளைவு எவ்வளவு கோரமாக இருந்திருக்கும் என்பதை எண்ணக் கூட மனம் பதைபதைக்கிறது.

கடைசியில் அவ்வரபியையும் மௌலவி அபுஸ்ஸூவூத் அஹ்மத் சாஹிபையும், மாணவர்கள் என்னிடம் கொண்டுவந்து மன்னிப்புக்கோர வேண்டுமென்பது எனது விருப்பமல்ல ; மாணவர்களின் உணர்ச்சியைத் தடுக்க என்னால் இயலவில்லை மேலும் தற்போதுள்ள தப்லீக் ஜமாத்திற்கு எதிர்ப்பாக நான் விடுத்த பத்வாவிற்கு பிறகிலிருந்து மௌலவி அபுஸ்ஸூவூத் அஹ்மது சாஹிப் இங்கு வரக்கூடிய தப்லிக் ஜமாஅத்தார்களையும் என்னிடம் அழைத்துக் கொண்டு வந்து பலவாறாக அறிமுகம்படுத்தி வைத்துக்கொண்டிருந்தார். இவ்விதம் அவர் செய்து வந்ததின் நோக்கம் எவ்வாறு இருந்திருக்கும் என்பதை இந்நிகழ்ச்சியின் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது. இந்தச் சம்பவம் என்னைமட்டும் அவமானப்படுத்த வேண்டுமென்று செய்யப்பட்டதல்ல மற்ற உஸ்தாதமார்களையும், உலமாக்களையும் மத்ரஸா நிர்வாகிகளையும், வேலூர் வாசிகளையும்கூட அவமானப்படுத்த வேண்டுமென திட்டமிட்டு செய்த சூழ்ச்சி என நினைக்கவேண்டியதிருக்கிறது. இந்த தப்லீக்வாதிகள் எங்கு சென்றலும் இவ்வாறு குழப்பம் விளைவித்துக் கொண்டே இருக்கிறர்கள். ஆண்டவன் இன்னர்களுக்கு நேரியவழியைகாட்ட வேண்டுமென நாம் எல்லோரும் துஆ செய்வோமாக! ஆமீன்.

குறிப்பு :– இச்சம்பவம் பற்றி தனிப்பட்ட நபர்களிடத்திலும், மற்றும் வேலூர் சுற்றுப்புற ஊர்களிலும் தவறான வதந்தி பரவி விடக்கூடாதென்பதை விளக்குவான் வேண்டியே இவ்வுண்மையை பத்திரிகை வாயிலாக பொதுமக்களுக்கு அறிவித்துக்கொள்கிறேன்.

இங்ஙனம்
ஷேக் ஆதம் அபா அன்ஹு
காதிமே துலபா, மதரஸா பாக்கியத்துஸ் ஸாஸிஹாத்
வேலூர்.

திருச்சி மறுமலர்ச்சி வார இதழில் (5–1–60)ல் வெளியான அறிக்கை.

## 13. தேவ்பந்திகளின் தமிழக ஏஜெண்டுகள்

பாக்கியாத்திலிருந்து தேவ்பந்திய கொள்கைகளுக்கு வால் பிடித்ததற்காக வெளியேற்றப்பட்ட லால் பேட்டை அமானி ஹஜ்ரத்தின் தவறான பத்வாவிற்கு எதிராக 1956ல் வெளிவந்த பிரசுரம் இது.

**மௌலானா அமானி ஸாஹிபின் வெளிப்பூசலைக்கண்டு ஏமாறாதீர்கள்.**

தென்னிந்தியாவில் அநேக மதரஸாக்களுக்குத் நாயகமாயுள்ள பாக்கியாத்துஸ் ஸாலிஹாத்தின் நாஜிரும், முப்தியுமான அஃலா ஹஜ்ரத் அவர்கள் தற்காலத் தப்லீக் முறையைப்பற்றி எழுதிய பத்வாவில் வெளிப்படையாக விளங்கும் கருத்திற்கும், பிக்ஹின் சட்டங்களுக்கும் விரோதமாக உள்ள ஒரு கேள்வியை கற்பனை செய்து அந்தக் கற்பனையான கேள்விக்கு மௌலானா அமானி ஸாஹிப் அவர்கள் நீண்ட விடை பகர்ந்துள்ளார்கள். இடையிடையே அஃலா ஹஜ்ரத் அவர்களின் கருத்துகளை மாற்றிக்கூற முயற்சியும் செய்துள்ளார்கள். தற்காலத் தப்லீக் முறையை இஸ்திராமக்கி வைக்க பெரும் முயற்சி செய்துள்ளார்கள். என்பதில் ஐயமில்லை. ஆனால் அந்த ஆதாரங்களை அலசிப்பார்க்கும் போது மௌலானா அமானியவர்களுக்கு பாதகமாகவும், தற்காலத் தப்லீக் முறை ஜாயிஸ் இல்லை எனக்கூறுபவர்களுக்கு சாதகமாகவும் இருக்கிறது. இங்கு சிலதை மட்டும் குறிப்பிடுகிறேன். இன்ஷா அல்லாஹ் அடுத்தாற்போல் விரிவாகப் புத்தக ரூபத்தில் வெளியிடுகிறேன்.

தப்லீக் ஜமாஅத்தின் இஸ்திமாவிற்கு ரசூல் (ஸல்) அவர்கள் அன்ஸாரிகளைத் திரட்டியதையும் (ஸ்கீமா பனீஸ்தாவில் ஸஹாபாக்கள் திரண்டு அபூபக்கர் (ரலி) அவர்களை கலீபாவாகத் தேர்ந்தெடுத்தையும் ஆதாரமாகக் கூறியிருக்கிறார்கள். கொள்ளை முதலை முஹாஜிரீன்களுக்கு மட்டும் கொடுத்து அன்ஸாரிகளுக்கு கொடுக்காமலிருந்தது மார்க்க அடிப்படையின் பேரிலேயே இருப்பதுடன் நபியின் நிர்வாக வேலையைச் சேர்ந்ததாகவுமிருந்தது. அதை



வெளியாக்குவற்காக ரசூல் அவர்கள் தங்களை எள்ளவும் கூட தவறாது பின்பற்றி நடக்கும் ஸஹாபாக்களான அன்ஸாரிகளை ஒரு கூடாரத்தில் திரட்டி மார்க்கச் சட்டத்தைக்கூறி அவர்களின் மனக்கசப்பை அகற்றினார்கள். இது காரணத்திற்காக ஸஹாபாக்களைத் திரட்டியது. அல்லாஹுவின் கட்டளையே ஆகும். இதேபோல் அபூபக்கர் (ரலி) அவர்களின் நேர்மையான கிலாபத்தை ரசூல் உடைய வபாத்திற்குப்பின் ஏற்படுத்த ஏற்கனவே சகீபாபனீஸ்தாவில் சேகரமாயிருந்த ஸஹாபாக்களுடன் வேறு ஸஹாபாக்களையும் குழப்பம் உண்டாகாதிருக்க ஹஜரத் உமர் (ரலி) அவர்கள் ஒன்று சேர்த்தார்கள். மெஜாரரிட்டியாகவுள்ள (ஒரு முகமாகவுள்ள) அபிப்பிராயத்தினால்) ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்களை கலீபாவாக ஹஜ்ரத் உமர் (ரலி) அவர்கள் தேர்ந்தெடுத்தார்கள். (இதன் முழு விபரம் அடுத்த பிரசுரத்தில் வெளிவரும்) இவ்விதமாக ஒன்று சேர்ந்தது நபியின் (ஸல்) கட்டளைக்கு வழிப்படுவதேயாகும் ஹஜ்ரத் உமர் (ரலி) அவர்கள் தன் கிலாபத்தில் தப்லீக், வஅல், பத்வா மார்க்க அல்லது ஹாகீம் உடைய அனுமதியின்றி செய்யக்கூடாது என்றும் அவ்விதம் கூடும் இஜ்திமாக்களுக்கு பல நிபந்தனைகளையும், சட்டங்களையும் ஏற்படுத்தினார்கள். இதே பிரகாரம் ஷாஹ்வலியுல்லா முஹத்திஸ் (ரஹ்) அவர்கள் தன் கிதாபில் எழுதியுள்ளார்கள் ஆகையால் இப்பொழுது கடிவாளதமில்லாத தான்றேன்றித்தனமாய் பேசும் இல்யாஸிய்யாக்க (துப்லீக்கார்கள்) ளின் இஜ்திமாவிற்கு முற்றிலும் ஆதாரமாகாது.

கஷ்துக்கு ஆதாரமாக பள்ளிக்கு வராதவர்கள் வீடு உற்பட அவர்களை கொளுத்திவிடுவேன் என்று அறிவிக்கும் ஹதீத் கூறப்பட்டிருக்கிறது ரசூல் (ஸல்) ஜமாஅத்தையும், அதை விடக்கூடியவர்களுக்கு பயமுறுத்தவும், எச்சரிக்கை செய்யவும் அவ்விதம் கூறினார்கள். ஆனால் ரசூல் (ஸல்) அவர்களின் வயது முழுவதிலும் அவ்விதம் செய்யவில்லை அவர்களின் நான்கு கலீபாக்களும் அவ்விதம் செய்யவில்லை கஷ்து செய்யவில்லை. எனவே இதே ஹதீது அவ்விதம் செய்வது சுன்னத் அல்லவென்று அறிவிக்கின்றது. ஆகையால் இந்த ஹதீது கஷ்துக்கு ஆதாரமாக ஆகமாட்டாது.

உண்மையில் பிர்அவ்ன் அல்லாஹ்விற்கு கடினவிரோதியாகவும் தன்னை ஒரு நாயகனாவும் எண்ணிக்கொண்டிருந்தான். மிஸ்ருக்கு அரசனாகவும் ஆயிருந்தான். முர்ஸலான மூசா (அலை) மத்யன் என்ற நகருக்கு போகக்காரணமாயிருந்த சம்பவத்தினாலும் நாவில் கொன்னல் இருந்ததாலும் தனக்கு உதவியாக அழகாக நல்லமுறையில் பேசும் ஹாருன் (அலை) அவர்களை தங்களுடன் அனுப்பிவைக்கப் பிரார்த்தனை ஏற்று ஹாருன் (அலை) அவர்களை நபியாக ஆக்கினான். அல்லாஹ்வின் கட்டளைப் படி அவர்களை அழைத்து பிர்அவ்னிடம் சென்றார்கள். இதே போன்று உலமாக்கள் கலீபா அல்லது ஹாகிமின் உத்திரவு பெற்று தப்லீகிற்காக வெளியில் செல்லலாம். தற்சமயம் இஸ்லாமிய அரசாங்கம் இல்லாததால் உலமாக்கள் சென்று தப்லீக் செய்வதில் ஆட்சேபனை இல்லை. ஆனால் இந்த சம்பவம் மார்க்க ஞானமில்லா தப்லீக் ஜமாஅத்தார் ஒன்று சேர்ந்து போவதற்கு ஆதாரமாக ஆகாது. அச்சம்பவத்தை தற்காலத்தில் நடக்கும் பிரச்சாரத்திற்கு ஒப்பிடுவதும், அதை ஆதாரமாக எடுப்பதும் ஒனறுதான் என்று கூறுவதற்கொப்பாகும்.

மூஸா (அலை) கிலுரு (அலை) இடத்தில் ஞானக்கல்வியை கற்றுக் கொள்வதற்காக சென்றது; அவர்களுடனேயே பிரயாணம் செய்ததும் உண்மைதான். மேலும் இப்பிரயாணம் நபிவத்துத்தைப் பொறுத்த அடிப்படையின் பேரிலிருந்தது. எனவே தற்கால இல்யாஸிய்யாக் கூட்டத்தினரின் டில்லி மேவாத்து போன்ற இடங்களுக்குப்பிரயாணம் செய்வதை மூஸா (அலை) அவர்களுடைய இப்பிரயாணத்தை ஆதாரமாகக் காட்டுவது முழுக்க முழுக்க தவறாகும் ஏனெனில் டில்லி மேவாத்து வகைக்களுக்கு பிரயாணம் செய்யும் நோக்கமே ஆரம்பப் பாடமாகவுள்ள ஆறு வார்த்தைகள் மட்டும் தான் (சேபார்த்தே) இப்பாடத்தை ஊரிலிருந்தே படித்துக்கொள்ள முடியுமாதலால் அவ்விடங்களுக்கும் பிராயணம் செய்ய சிலவிடப்படும் தொகைகள் வீண் விரையமேயாகும். மௌலானா அமானியவர்கள் ரசூலுடைய காலத்திலும் அதற்கடுத்தாற் போலுள்ள காலங்களிலும் பெண்கள் ஊர் ஊராகச் சென்று தப்லீக் செய்ததையும் அல்லது தம்



ஊரிலேயேயிருந்து பெண்களைத் திரட்டி தப்லீக் செய்ததையும் தகுந்த ஆதாரங்களுடன் எடுத்துக்காட்ட முடியுமா? முடியாது.

மௌலானா அமானியவர்கள் தப்லீக் சம்பந்தமாக வந்திருக்கும் புகார்களை எதிரிகளால் செய்யப்பட்டிருக்கலாம் என வரைந்துள்ளார்கள். தப்லீக்மார்களை இவ்விதத்தவறுகள் செய்தாகச் சாட்சிகளுடன் நிரூபிக்கப்பட்டால் தான் கொடுத்த பத்வாயை தவரென்று (உண்மை அவருடைய நோக்கமாக விருப்பின்) ஒரு பிரசுரம் வெளியாக்க முடியுமா? மௌலானா அமானியவர்களும், மேல்படியாரின் பத்வாவில் கையொப்பமிட்டிருக்கும் மௌலவிகளும் தங்களுடைய கல்புகளிடத்தில் இது சம்பந்தமாக முடிவு செய்யட்டும்.

இந்த வஹ்ஹாபிகளை பின்பற்றி பட்டுக்கோட்டையில் நடந்த 14.04.1994 ம் நாள் வியாழக்கிழமை மாணவர்களின் கார்கூன்களின் இஜதிமாவில் அதிராம்பட்டினத்தைச் சார்ந்த மௌலவி லத்தீப் ஆலி அவர்கள் பேசும் போது மனிதனின் மரணத்தருவாயில் (சக்ராத்ஹாலில்) லாயிலாஹா இல்லல்லாஹ் என்று மட்டும்தான் சொல்ல வேண்டும் என்று முஹம்மதூர் ரஸுலுல்லாஹ் (ஸல்லல்லாஹ் அலைஹிவ்ஸல்லம்) என்று சொல்லக் கூடாது என்றும் கூறியதிலிலிருந்து தப்லீக்கினரின் வஹ்ஹாபி கொள்கை தெளிவாகத் தெரிகிறது இநதச் செய்தி முஸ்ஸீம் குரல் அல்ஃபைஜில் இஸ்லாம் இதழ்களில் வெளிவந்துள்ளது.

தப்லீக் ஜமாஅத் பற்றிய தவறான குற்றச்சாட்டுகளும், தக்க பதில்களும் என்ற நூலில் தேவ்பந்திய வஹ்ஹாபிய மௌலவிகளுக்கு வக்காலத்து வாங்கிய கீரனூர் கலீல் அஹ்மது என்பவர் தாம் அந்த நூலில் எதை எழுதுகிறோம் என்று தெரியாமலே முன்னுக்குப்பின் பல முரணான தகவலை தந்திருக்கிறார். இந்த முட்டாள் தனமான விளக்கத்திற்கு தகுந்த முறையில் சுன்னத் ஜமாஅத் உலமா பெருமக்கள் கண்டனம் செய்து பதிலளித்துள்ளார்கள். தப்லீக் ஜமாஅத்தில் ஏன் சேரக்கூடாது என்ற நூலில் இதன் விபரம் காணலாம்.

## தேவ்பந்தின் சதிவலையில் பாக்கியாத் மீட்கப் போராடும் லிபாஸ் அமைப்பு

### ஒரு பாக்கவியின் ஆதங்க கடிதம்

ஹாசிபுல் ஹுதா என்ற பெயரில் மதரஸா ஒன்றை சென்னை நூம்பல் பகுதியில் நடத்திவரும் யாகூப் விஷாரகு எனும் தேவ்பந்த் ஏஜெண்ட் தமிழகத்தில் செய்யும் அயோக்கிய தனத்தை இக்கடிதம் அம்பலப்படுத்துகிறது.

“ஆக்கிரமிப்பில் பாக்கியாத் கட்டுரைத் தொடரில் வேஷம் கலைகிறது ஆக்கம் கண்டேன். பத்வா என்ற சொல் உம்த்திற்குப் பெரிய ஃபித்னா - குழப்பமாக மாறிவிட்டது. அல்லாஹ்வைப் பயப்படாமல், ஹாஷிமின் பணத்தை மட்டுமே தவக்கு வாக கொண்டு பாக்கியத்தின் அப்போதைய ஆசிரியர்களுக்கு சம்பந்தமில்லாத ஒரு தொகுப்பை பாக்கியாத்ஃபத்வா என்ற பெயரில் வெளியிட்டார் மௌலானா யாகூப் விஷாரமி அதையும் பாக்கியாத்துஸ்ஸாலிஹாத்தின் வெளியீடாக வெளியிட்டது அப்பட்டமான மோசடியாகும். ஹாஸிமின் தயவு ஒன்று மட்டுமே அன்று இந்த ஃபத்வா தொகுப்பு வெளியானதற்கு காரணமாக இருந்தது என்பதை யாராலும் மறுக்க முடியாது அதனால்தான் ஹாஷிமின் மேல் விஷாரத்து குடோனிற்குள் அது அடக்கம் பெற்றுவிட்டது. இப்போது அதை தூசு தட்டி எடுத்துக் கொண்டு வருவதற்கு முயற்சி நடப்பதை தகுந்த நேரத்தில் சுட்டிக் காட்டியுள்ளீர்கள்.

1988-ல் அப்போதைய பாக்கியாத்தின் ஆசிரியர்களான அப்துல் ஜப்பார் ஹஜ்ரத், கமாலுத்தீன் ஹஜ்ரத் உள்ளிட்ட மற்ற ஆசிரியர்கள் அனைவருக்கும் எதிராக யாகூப் விஷாரமியின் தொகுப்புக்குத் துணையாக இருந்தவர்தான் முஹம்மதுகான் பாக்கவி. இத்தனை காலம் ரஹ்மத் அறக்கட்டளையின் ஏசி அறைக்குள் சும்மா இருந்தவருக்கு தன்னை யாரும் பொருட்படுத்துவதில்லை என்ற கோபத்தினாலோ என்னவோ திடீரென சூடு பிடித்தவராக ஒரு நோட்டீஸ் வெளியிட்டுள்ளார்.



பாக்கியாத்தின் இன்றைய நிலைக்கு எதிராக பாக்கவிகள் என்ன கருத்து கொண்டிருக்கிறார்கள் என்பதை முழுமையாகத் தெரிந்து கொள்ளாமலே அவர்களை அவமானப்படுத்துவதாக நினைத்துக்கொண்டு பேனாவைத் திறந்திருக்கிறார். ஓடிப்போகிற பெண்கள் விஷயத்தில் அவர் காட்டுகிற கவலை நியாயமானது. தற்போது பாக்கியாத் விஷயத்தில் அவர் வெளியிட்டுள்ள கருத்துகள் நரித்தனமானது.

யாகூப் விஷாரமியால் தூண்டப்பட்டு கான் பாக்கவியால் பாக்கியாத்திற்கு அழைத்து வரப்பட்ட இக்பால் காஸிமி போன்றவர்கள் பாக்கியாத்தின் முன்னால் முதல்வர்களாக தமிழகத்திற்கு கிடைத்த பொக்கிஷங்களாக ஷேக் ஆதம்(ரஹ்) கடப்பா அப்துல் ஜப்பர் (ரஹ்) ஆகியோரை பித்அத்திகளாக கான் பாக்கவியின் பாஷையில் குராஃபிகளாக குற்றம் சாட்டினார்கள். இந்த இருவரோடு இவர்கள் நிறுத்திக் கொள்ளவில்லையே? ஆட்டைக் கடித்து மாட்டைக்கடித்து மனுஷனைக் கடித்த கதையாக அஃலா ஹஜ்ரத்தின் மகனார் ஜியாவுத்தீன் ஹஜ்ரத் அவர்களையும் அஃலா ஹஜ்ரத்தின் நேரடியான மாணவர்களையும் அல்லவா அஃலா ஹஜ்ரத்தின் போக்கிற்கு எதிரானவர்களாகக் காட்ட முயல்கிறார்கள்.

இவர்கள் நேர்மையாகச் சிந்திக்கிறார்களா இல்லையா என்றே எனக்கு சந்தேகம் எழுகிறது? பாக்கியாத் தென்னிந்தியாவின் மார்க்க வழிகாட்டி என்பதை ஒத்துக் கொள்கிறார்களா இல்லையா ? அப்படியானால் பாக்கியத்திலும், தமிழகத்திலும் நடைமுறையில் இருக்கும் செயல்கள் அஃலா ஹஜ்ரத் அவர்களின் பத்வாக்களுக்கு முரணாக இருக்கின்றன என்றால் உமர் (ரஸி) அவர்களும் உஸ்மான் (ரஸி) அவர்களும் பெருமானார் (ஸல்) அவர்களுக்கு முரண்பட்டுவிட்டார்கள் என்று சொல்கிற தவ்ஹீத் வாதிகளின் வாந்தி எடுப்பை இவர்கள் உட்கொள்கிறார்கள் என்றுதானே பொருள் ? தனது மார்க்க கருத்தை முன்னெடுத்துச் செல்லும் ஓர் அடுத்த குழுவைஅஃலா ஹஜ்ரத் அவர்களால் உருவாக்க முடியவில்லை என்று தானே அதற்கு அர்த்தம் வரும் ?

பாக்கவிகளிடையே பிரிவு இருக்கிறது என்பதாக காட்ட முயற்சித்த காஷிபுல் ஹுதா & ஹாஷிம் கம்பெனியின் பகீரத முயற்சிக்கு கான் பாகவி பலியாகி இருக்கிறார். கான் பாக்கவி தாம் ஒரு நோட்டீஸ் வெளியிடுவதற்கு முன் தனது கருத்தை பாக்கவிகளை அழைத்துத் தெரிவித்திருந்தால் அது நியாயம். அதற்காக பாக்கவிகளுக்கு அழைப்பு விடுத்து ஒரு பொது அறிவிப்பை வெளியிட்டிருந்தால் அது நேர்மை. இரகசியமாக 20 பேருக்கு எஸ்.எம்.எஸ். அனுப்பி அதிலும் வெளியிருந்து வந்த ஒரே ஒரு நபரை மட்டும் வைத்துக் கொண்டு ஒரு கூட்டம் நடத்துவது, அதில் ஓர் அமைப்பை உருவாக்கி அதற்கு தலைமை தாங்குவது எந்த வகையில் சாத்தியம்? லெட்டர் பேட் அமைப்புக்கு பொறுப்பு வகிக்கிற அரசியலை இதிலுமா காட்டுவது ?

- நன்றி சமநிலை சமுதாயம் மே 2012

## 14.தேவ்பந்திகளுக்கு எதிரான உலகலாவிய மார்க்க தீர்ப்புகள்...

தங்களை வஹ்ஹாபிகள் என்று கூறக்கூடாது என்று தப்லீக் ஜமாத்தைச் சார்ந்த பேஷ் இமாம்கள். மற்றும் தப்லீக் ஜமாத்தினர் நீதி மன்றத்தில் வழக்குத் தொடர்ந்த போது குஜராத் – அஹ்மதாபாத் கர்நாடகம், பெல்காம், சிங்கப்பூர் ஆகியவற்றின் நீதி மன்றங்கள் தப்லீக் ஜமாத் வஹ்ஹாபிகள் தான் என்று அவர்களின் நூல்களை மேற்கோள் காட்டி தீர்ப்பளித்துள்ளனர்.

மேலே கண்ட வஹ்ஹாபிக் கொள்கைகளைக் கண்டித்து உலமா பெருமக்கள் வழங்கிய சில பத்வாக்கள் (மார்க்கத் தீர்ப்புகள்) மட்டும் இங்கே தருகிறோம்.

1. மக்கா, மதினாவிலுள்ள 34 மாபெரும் மார்க்க மேதைகள் ஹுஸாமுல் ஹரமைன் அலா மன்ஹரில் குப்ரிவல்மைன் என்ற தலைப்பில் ஹிஜ்ரி 1324 ல் ரஷீது அஹ்மது கங்கோஹி, கலீல் அஹம்மது அம்பேட்டி, அஷ்ரப் அலி தானவி (இல்யாஸின் குரு) ஆகியோர்கள் காபிர்கள் என பத்வா தந்துள்ளார்கள்.



2. இந்தியாவின் பல பாகங்களிலிருந்து சங்கைக்குரிய 268 உலமாக்கள் அஸ்வாரிமுல் இந்தியா என்ற தலைப்பில் மேற்கூறப்பட்டவர்கள் காபிர்கள், முர்தத்துகள் என்ற மார்க்கத் தீர்ப்பு ஹிஜ்ரி 1345-ல் வழங்கியுள்ளார்கள்.

3. இந்தியாவிலுள்ள 45 உலமாக்கள் அல் அதாபல் பஃஸ் அலாரஃஷி இல்யாஸ் என்ற தலைப்பில் ஹிஜ்ரி 1372-ல் இல்யாஸ் காபிர் என்று பத்வா கொடுத்துள்ளார்கள்.

4. வேலூர் பாக்கியாத்துஸ் ஸாலிஹாத் அரபிக் கல்லூரி முன்னாள் முதல்வரும், சென்னை மாநில ஜமாத்துல் உலமா சபை நிரந்தர கௌரவத் தலைவருமான மௌலானா. மௌலவி அல்லாமா முப்தில் அஃலம் சேக் ஆதம் ஹஜரத் அவர்களும், கல்லூரி பேராசிரியர்கள் அனைவரும் தப்லீக் ஜமாத்தில் சேரக்கூடாது. அது ஒரு நூதன வழி கெட்ட கூட்டம் என பத்வா கொடுத்துள்ளார்கள்.

5. தமிழ்நாடு அரசு முன்னாள் பிரதம காஜி. மௌலானா அல்லாமா முப்தி முஹம்மது ஹபீபுல்லா ஹஜ்ரத் அவர்கள் தப்லீக் ஜமாத்கீ அஸ்லியத் என்ற தலைப்பில் இல்யாஸ் தப்லீக்கில் சேரக்கூடாது அது வழிகேடானது என பத்வா கொடுத்துள்ளார்கள். மஹாராஸ்டிர மாநில அரசாங்க காஜியும் கூட இல்யாஸ் தப்லீக்கை எதிர்த்து பத்வா கொடுத்துள்ளார்கள்.

6. சமஸ்த கேரள ஜமீயத்துல் உலமா சபை பத்வா கமிட்டி தப்லீக் ஜமாத்தார்களின் சகல நூல்களையும் ஆராய்ந்து தீர்வு கண்டு இந்த இல்யாஸின் தப்லீக் ஜமாத்தில் சேரக்கூடாது என்று 1965ல் பத்வா தந்துள்ளது. இந்த பத்வா 10.11.1965 கேரள சந்திரிகா இதழில் வெளிவந்துள்ளது.

7.அஷ்ஷெய்குசையத் ஷா மஜ்ஹர் ரப்பாணி கிப்லா மத்தல்லாஹுல் ஆலி அவர்கள் 26.4.1962ல் 4 கேள்விகளுக்கு தகுந்த முறையில் பதிலளித்ததை தொகுத்து தப்லீக்ஜமாஅத் கியா ஹை ? என்று நூல் வெளியிட்டுள்ளார்கள்.

## முடிவுரை

இந்நூல் தொகுக்கப்பட்ட நோக்கத்திற்கான முடிவுரைக்கு வருவோம். இதில் நாம் எடுத்து வைத்திருக்கின்ற கருத்துக்களில் சந்தேகங்களும் வரலாம். ஒரு நூற்றாண்டை கடந்த மாபெரும் மதரஸாவான தாருல் உலூம்காஸிமிய்யா (எ) தேவ்பந்து மதரஸா பிரிடிஷ் ஏகாதிபத்தியத்தின் அடிவருடியா? இதை ஜீரணிக்க முடியவில்லையே என்று எண்ணம் தோன்றலாம். ஆனால் உலக நடைமுறை வரலாறுகள் நம்மை நம்பச் செய்கின்றன.

700 ஆண்டு இஸ்லாமிய ஸ்பெயின் ஆட்சியையும் அரேபிய தீபகற்பத்தில் நிலைத்திருக்கும் துருக்கி நாட்டின் உஸ்மானிய பேரரசு (odoman) கிலாபத் ஆட்சி சூழ்சிகள் சதிகள் 200 ஆண்டுகள் செய்து சின்னபின்னமாக்கப்பட்டது. அரேபிய தீபகற்பத்தை துண்டு துண்டாக பிரித்து இஸ்ரேல் யூத அரசை அராஜகத்தோடு பாலஸ்தீனத்தில் புகுத்தியதும் இன்றுவரை சவூதிய & யஹூதி பிரஜைகள் மக்கா மாநகரம், மதீனா ஷரீபில் ஆட்சி பீடத்தில் அமர்த்தி இஸ்லாத்தின் அத்துணை புனித திருத்தலங்களை அழித்து ஒழித்தது யூதவஹாபிய சவூதிய அமெரிக்க ஏகாபத்தியமே. அதன் ஓர் திட்டமாக இந்தியாவில் வஹாபியத்தை சன்னம் சன்னமாக திணிக்க தேவ்பந்து மதரஸா ஆரம்பிக்கப்பட்டு அதன் ஆக்டோபஸ் கரங்களால் தமிழகம் போற்றும் தாய் மதரஸாவாம் பாக்கியாத்தையே முழுங்கி ஏப்பம் விட தயாரான போதுதான் பாக்கியத்தின் மீது உண்மை பற்றுள்ள பாக்கவிகள் துடித்தெழுந்து முனைப்போடு செயல்பட்டு லிபாஸ் என்று சங்கம் நிறுவி விஷாரத்து வஹாபிய சாத்தான்களையும், சென்னை தவ்ஹீது வஹாபிய காஷிஃபிக்களுடனும் மல்லுக்கட்டி போராடி வருகின்றனர்.

மேலும் நம் கருத்தானது தேவ்பந்து வஹாபிகள் தவ்ஹீது வஹாபிகளை விடபன்மடங்கு முனாபிக்தனமான செயல்பாட்டுடன் அல்லா பொய் சொல்வது சாத்தியம், நபி மூத்த சகோதரர்,நபி ஒரு போஸ்ட்மேன், ஷைத்தானின் இல்முக்கு குர்ஆனில் ஆதாரம்



உண்டு, நபியின் மறை ஞானத்திற்கு ஆதாரமில்லை. நபியை தொழுகையில் நினைவு கூறுவது மாடு, கழுதை, விபச்சாரத்தை நினைவு கூறுவதை விட கேவலமானது. ரஸுல்மார்கள், நபிமார்கள், வலிமார்கள் மவுத்தாகி மண்ணோடு மண்ணாகி போனவர்கள். மீலாது, மௌலூது ஹராம், பாத்திஹா ஷீரினி தப்ரூக், நேர்ச்சை சாப்பிடுவது ஹராம்.

இப்படி அடுக்கிக் கொண்டே போகலாம். அத்தனை வஹாபிய்ய விஷயங்களையும் தேவ்பந்து உலமாக்களும். தப்லீக் ஜமாத் தலைவர்களும் திரும்ப திரும்ப தத்தமது நூல்களில் பக்கம் மாற்றி பக்கம் புதிய புதிய பதிப்புகளில் அச்சுப் போட்டுக் கொண்டேயிருக்கிறார்கள் என்கிற போது வாசகர்களே! நீங்களே உங்கள் நெஞ்சில் கைவைத்து சொல்லுங்கள் அவர்களுடைய நூல்களில் உள்ளதை நன்றாக பார்த்து வாசித்தபின் உங்கள் மனச்சாட்சிபடி கூறுங்கள்.

தேவ்பந்து மதர்ஸா தாருல் உலூம் காஸிமிய்யா வஹாபிய பாசறையின்றி வேறென்ன ?

தேவ்பந்து மதர்ஸாவின் தப்லீக் ஜமாஅத் எத்தனை கலிமாவை எத்தி வைத்தாலும் (காபீர்களுக்கு இல்லை, அதுவும் முஸ்லீம்களுக்கு) எவ்வளவு பேரை தொழுகைக்கு அழைத்தாலும் எத்தனை இஜ்திமாக்களுக்கு கூட்டம் கூட்டினாலும் ஒரே ஒரு தீர்மானமோ இஸ்லாத்திற்கும் இஸ்லாமியர்களுக்கும் ஏதும் செய்யாமல் மக்களை வியாபாரத்திலிருந்து, உத்தியோகத்திருந்து , சொந்த தொழில்களிருந்து, போண்டியாக்கி, வானத்துக்கு மேலும் பூமிக்கு கீழும் யோசிக்கவைத்து முஸ்லீம்களின் வாழ்வாதரங்களை ஒழித்துக்கட்டும் தப்லீக் ஜமாஅத் அமெரிக்க அடிவருடிகள்தான் என்பது பலவகைகளிலும், பலநாடுகளிலும் நிரூபிக்கப்பட்ட பின்னர் தப்லீக் இயக்கம் வஹாபிய இயக்கமல்லாமல் வேறு என்ன இயக்கம்?

தப்லீக் இயக்கத்தின் ஸ்தாபகர் இல்யாஸ் கூற்றோடு....

ஜஹீருல் ஹசன் மக்கள் நினைக்கிறார்கள் (தப்லீக் இயக்கம்) தொழுகைக்கு அழைக்கும் இயக்கம் என்று நான் அல்லாவின் மீது சத்தியம் செய்து சொல்கிறேன். இது ஒருபோதும் தொழுகைக்கு அழைக்கும் இயக்கமல்ல மாறாக புதியதோர் கூட்டத்தை உருவாக்கும் இயக்கமே

அந்த புதியதோர் கூட்டம் தான் வஹாபிய்யத் என்ற உண்மை நிலையை உங்கள் சிந்தனைக்கு விட்டு விடுகிறோம்.

நேரான சுன்னத்வல் ஜமாஅத் பாதையில் எங்களை நடத்தாட்டுவாயாக யாஅல்லா என்று இறைநேசச் செல்வர்களாம் வல்ல வலிமார்கள் வாஸீலா தேடி நிறைவு செய்கிறோம்.

வஸ்ஸலாம்.